சங்கொளி போல்நகை வீசித்தண்

கொங்கைகள் மார்பினி லாடக்கொண்

டையென்மேகம்

கொங்கெழு தோள்வளை யாடக்கண்

செங்கயல் வாளிகள் போலப்பண்

கொஞ்சிய கோகில மாகப்பொன்

பறிகாரர்

தந்திர மாமென வேகிப்பொன்

தொங்கலொ டாரமு மாடச்செந்

தம்பல வாயொடு பேசிக்கொண்

டுறவாடிச்

சம்பள மீதென வோதிப்பின்

பஞ்சணை மேல்மய லாடச்சஞ்

சங்கையில் மூளியர் பால்வைக்குஞ்

செயல்தீராய்

அந்தக னாருயிர் போகப்பொன்

திண்புர மோடெரி பாயப்பண்

டங்கச னாருடல் வேகக்கண்

டழல்மேவி

அண்டர்க ளோடட லார்தக்கன்

சந்திர சூரியர் வீழச்சென்

றம்பல மீதினி லாடத்தன்

குருநாதா

சிந்துர மோடரி தேர்வர்க்கம்

பொங்கமொ டேழ்கடல் சூர்பத்மன்

சிந்திட வேல்விடு வாகைத்திண்

புயவேளே

செங்குற மாதுமி னாளைக்கண்

டிங்கித மாயுற வாடிப்பண்

செந்தமிழ் மால்புலி யூர்நத்தும்

பெருமாளே.

பாடல் 492 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தனனா தத்தன தானத்தம்

தனனா தத்தன தானத்தம்

தனனா தத்தன தானத்தம்

தனதான

நகையா லெத்திகள் வாயிற்றம்

பலமோ டெத்திகள் நாணற்றின்

நயனா லெத்திகள் நாறற்புண்

தொடைமாதர்

நடையா லெத்திக ளாரக்கொங்

கையினா லெத்திகள் மோகத்தின்

நவிலா லெத்திகள் தோகைப்பைங்

குழல்மேகச்

சிகையா லெத்திக ளாசைச்சங்

கடியா லெத்திகள் பாடிப்பண்

திறனா லெத்திகள் பாரத்திண்

தெருவூடே

சிலர்கூ டிக்கொடு ஆடிக்கொண்

டுழல்வா ருக்குழல் நாயெற்குன்

செயலா லற்புத ஞானத்தின்

கழல்தாராய்

பகையா ருட்கிட வேலைக்கொண்

டுவரா ழிக்கிரி நாகத்தின்

படமோ டிற்றிட சூரைச்சங்

கரிசூரா

பணநா கத்திடை சேர்முத்தின்

சிவகா மிககொரு பாகத்தன்

பரிவால் சத்துப தேசிக்குங்

குரவோனே

சுகஞா னக்கடல் மூழ்கத்தந்

தடியே னுக்கருள் பாலிக்குஞ்

சுடர்பா தக்குக னேமுத்தின்

கழல்வீரா

சுகரே சத்தன பாரச்செங்

குறமா தைக்கள வால்நித்தஞ்

சுக்முழ் கிப்புலி யூர்நத்தும்

பெருமாளே.

பாடல் 493 ( சிதம்பரம் )

ராகம் - அடாணா; தாளம் - மிஸ்ரசாபு (3 1/2)

தகதிமி-2, தகிட-1 1/2

தனதன தனன தனதன தனன

தனதன தனன

தனதான

எழுகடல் மணலை அளவிடி னதிக

மெனதிடர் பிறவி

அவதாரம்

இனியுன தபய மெனதுயி ருடலு

மினியுடல் விடுக

முடியாது

கழுகொடு நரியு மெரிபுவி மறலி

கமலனு மிகவு

மயர்வானார்

கடனுன தபய மடிமையு னடிமை

கடுகியு னடிகள்

தருவாயே

விழுதிக ழழகி மரகத வடிவி

விமலிமு னருளு

முருகோனே

விரிதல மெரிய குலகிரி நெரிய

விசைபெறு மயிலில்

வருவோனே

எழுகடல் குமுற அவுணர்க ளுயிரை

யிரைகொளும் அயிலை

யுடையோனே

இமையவர் முநிவர் பரவிய புலியு

ரினில்நட மருவு

பெருமாளே.

பாடல் 494 ( சிதம்பரம் )

ராகம் - வலஜி ; தாளம் - அங்கதாளம் (14)

தகதிமி-2, தகிட-1 1/2, தகதிமி-2, தகிட-1 1/2

தகதிமி-2, தகதிமி-2, தக-1, திமிதக-2

தனதன தனன தனதன தனன

தனதன தனனாத்

தனதான

தறுகணன் மறலி முறுகிய கயிறு

தலைகொடு விசிறீக்

கொடுபோகுஞ்

சளமது தவிர அளவிடு சுருதி

தலைகொடு பலசாத்

திரமோதி

அறுவகை சமய முறைமுறை சருவி

யலைபடு தநல்முச்

சினையாகும்

அருவரு வொழிய வடிவுள பொருளை

அலம்வர அடியேற்

கருள்வாயே

நறுமல ரிறைவி யரிதிரு மருக

நகமுத வியபார்ப்

பதிவாழ்வே

நதிமதி யிதழி பணியணி கடவுள்

நடமிடு புலியூர்க்

குமரேசா

கறுவிய நிருதர் எறிதிரை பரவு

கடலிடை பொடியாப்

பொருதோனே

கழலிணை பணியு மவருடன் முனிவு

கனவிலு மறியாப்

பெருமாளே.

பாடல் 495 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தனதனா தத்ததன தனதனா தத்ததன

தனதனா தத்ததன தானனந் தனன

----- 3 முறை -----

தந்ததான

இரசபா கொத்தமொழி யமுர்தமா ணிக்கநகை

யிணையிலா சத்திவிழி யார்பசும் பொனிரர்

எழிலிநே ரொத்தஇரு ளளகபா ரச்செயல்க

ளெழுதொணா தப்பிறையி னாரரும் புருவர்

எழுதுதோ டிட்டசெவி பவளநீ லக்கொடிக

ளிகலியா டப்படிக மோடடும் பொனுரு

திங்கள்மேவும்

இலவுதா வித்தஇதழ் குமிழைநே ரொத்தளழி

லிலகுநா சிக்கமுகு மாலசங் கினொளி

யிணைசொல்க்ண வத்தரள வினவொள்தா லப்பனையி

னியல்கலா புத்தகமொ டேர்சிறந் தவடி

யிணையிலா னைக்குவடெ னொளிநிலா துத்திபட

ரிகலியா ரத்தொடையு மாருமின் பரச

தங்கமார்பின்

வரிகள்தா பித்தமுலை யிசையஆ லிற்றளிரின்

வயிறுநா பிக்கமல மாமெனுஞ் சுழிய

மடுவுரோ மக்கொடியென் அளிகள்சூழ் வுற்றநிரை

மருவுநூ லொத்தஇடை யாரசம் பையல்குல்

மணமெலா முற்றநறை கமலபோ துத்தொடையென்

வளமையார் புக்கதலி சேருசெம் பொனுடை

ரம்பைமாதர்

மயலதா லிற்றடியெ னவர்கள்பா லுற்றுவெகு

மதனபா ணத்தினுடன் மேவிமஞ் சமிசை

வதனம்வேர் வுற்றவிர முலைகள்பூ ரிக்கமிடர்

மயில்புறா தத்தைகுயில் போலிலங் கமளி

வசனமாய் பொத்தியிடை துவளமோ கத்துளமிழ்

வசமெலாம் விட்டுமற வேறுசிந் தனையை
தந்துஆள்வாய்
முரசுபே ரித்திமிலை துடிகள்பூ ரித்தவில்கள்
முருடுகா ளப்பறைகள் தாரைகொம் புவளை
முகடுபேர் வுற்றவொலி யிடிகள்போ லொத்தமறை
முதுவர்பா டிக்குமுற வேயிறந் தசுரர்
முடிகளோ டெற்றியரி யிரதமா னைப்பிணமொ
டிவுளிவே லைக்குருதி நீர்மிதந் துதிசை
யெங்குமோட
முடுகிவேல் விட்டுவட குவடு வாய் விட்டமரர்
முநிவரா டிப்புகழ வேதவிஞ் சையர்கள்
முழவுவீ ணைக்கினரி யமுர்தகீ தத்தொனிகள்
முறையதா கப்பறைய வோதிரம் பையர்கள்
முலைகள்பா ரிக்கவுட னடனமா டிற்றுவர
முடிபதா கைப்பொலிய வேந டங்குலவு
கந்தவேளே
அரசுமா கற்பகமொ டகில்பலா இர்ப்பைமகி
ழழகுவே யத்திகமு கோடரம் பையுடன்
அளவிமே கத்திலொளிர் வனமொடா டக்குயில்க
ளளிகள்தோ கைக்கிளிகள் கோவெனம் பெரிய
அமுர்தவா விக்கழனி வயலில்வா ளைக்கயல்க

ளடையுமே ரக்கனக நாடெனும் புலியுர்

சந்தவேலா

அழகுமோ கக்குமரி விபுதையே னற்புனவி

யளிகுலா வுற்றகுழல் சேர்கடம் புதொடை

அரசிவே தச்சொருபி கமலபா தக்கரவி

யரியவே டச்சிறுமி யாளணைந் தபுகழ்

அருண்ரு பப்பதமொ டிவுளிதோ கைச்செயல்கொ

டணைதெய்வா னைத்தனமு மேமகிழ்ந் துபுணர்

தம்பிரானே.

பாடல் 496 ( சிதம்பரம் )

ராகம் - வாசஸ்பதி ; தாளம் - மிஸ்ரசாபு (3 1/2)

தகிடதகதிமி-3 1/2

தனன தானன தனன தானன

தனன தானன

தனதான

இருளு மோர்கதி ரணுகொ ணாதபொ

னிடம தேறியெ

னிருநோயும்

எரிய வேமல மொழிய வேசுட

ரிலகு மூலக

வொளிமேவி

அருவி பாயஇ னமுத மூறவுன்

அருளெ லாமென

தளவாக

அருளி யேசிவ மகிழ வேபெற

அருளி யேயிணை

யடிதாராய்

பரம தேசிகர் குருவி லாதவர்

பரவை வான்மதி

தவழ்வேணிப்

பவள மேனியர் எனது தாதையர்

பரம ராசியர்

அருள்பாலா

மருவி நாயெனை யடிமை யாமென

மகிழ்மெய் ஞானமு

மருள்வோனே

மறைகு லாவிய புலியுர் வாழ்குற

மகள்மெ லாசைகொள்

பெருமாளே.

பாடல் 497 ( சிதம்பரம் )

ராகம் - மத்யமாவதி; தாளம் - மிஸ்ரசாபு (3 1/2)

தகதிமி-2, தகிட-1 1/2

தான தனத்தம் தான தனத்தம்

தான தனத்தம்

தனதான

காவி யுடுத்துந் தாழ்சடை வைத்துங்

காடுகள் புக்குந்

தடுமாறிக்

காயகனி துய்த்துங் காயமொ றுத்துங்

காசினி முற்றுந்

திரியாதே

சீவ னொடுக்கம் பூத வொடுக்கம்

தேற வுதிக்கும்

பரஞான

தீப விளக்கங் காண எனக்குன்

சீதள பத்மந்

தருவாயே

பாவ நிறத்தின் தாருக வர்க்கம்

பாழ்பட வுக்ரந்

தருவீரா

பாணிகள் கொட்டும் பேய்கள் பிதற்றும்

பாடலை மெச்சுங்

கதிர்வேலா

தூவிகள் நிற்குஞ் சாலி வளைக்குஞ்

சோலை சிறக்கும்

புலியூரா

சூரர் மிகக்கொண் டாட நடிக்குந்

தோகை நடத்தும்

பெருமாளே.

பாடல் 498 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தானத் தானத் தாந்தன தானன

தானத் தானத் தாந்தன தானன

தானத் தானத் தாந்தன தானன

தனதான

கோதிக் கோதிக் கூந்தலி லேமலர்

பாவித் தாகச் சாந்தணி வார்முலை

கோடுத் தானைத் தேன்துவர் வாய்மொழி

குயில்போலக்

கூவிக் கூவிக் காண்டிசை போலவெ

நாணிக் கூனிப் பாய்ந்திடு வார்சிலர்

கூடித் தேறிச் சூழ்ந்திடு வார்பொருள்

வருமோவென்

றோதித் தோளிற் பூந்துகி லால்முலை

மூடிச் சூதிற் று�ங்கமி லார்தெரு

வோடித் தேடிச் சோம்பிடு வார்சில

விலைமாதர்

ஓருச் சேரச் சேர்ந்திடு வார்கலி

சூளைக் காரச் சாங்கமி லார்சில

வோரைச் சாகத் தீம்பிடு வார்செய

லுறவாமோ

வேதத் தோனைக் காந்தள்கை யால்தலை

மேல்குட் டாடிப் பாந்தள் சதாமுடி

வீரிட் டாடக் காய்ந்தசு ரார்கள்மெல்

விடும்வேலா

வேளைச் சீறித் தூங்கலொ டேவய

மாவைத் தோலைச் சேர்ந்தணி வாரிட

மீதுற் றாள்பொற் சாம்பவி மாதுமை

தருசேயே

நாதத் தோசைக் காண்டுணை யேசுடர்

மூலத் தோனைத் தூண்டிட வேயுயிர்

நாடிக் காலிற் சேர்ந்திட வேயருள்

சுரமானை

ஞானப் பால்முத் தேன்சுரு பாள்வளி

மாதைக் கானிற் சேர்ந்தணை வாய்சிவ

ஞானப் பூமித் தேன்புலி யூர்மகிழ்

பெருமாளே.

பாடல் 499 ( சிதம்பரம் )

ராகம் -; தாளம் -

தனதந்தத் தனனா தனதன

தனதந்தத் தனனா தனதன

தனதந்தத் தனனா தனதன

தனதான

சகசம்பக் குடைசூழ் சிவிகைமெல்

மதவின்பத் துடனே பலபணி

தனிதம்பட் டுடையோ டிகல்முர

சொலிவீணை

தவளந்தப் புடனே கிடுகிடு

நடைதம்பட் டமிடோ ல் பலவொலி

சதளம்பொற் றடிகா ரருமிவை

புடைசூழ

வெகுகும்பத் துடனே பலபடை

கரகஞ்சுற் றிடவே வரஇசை

வெகுசம்பத் துடனே யழகுட

னிதமேவும்

விருமஞ்சித் திரமமா மிதுநொடி

மறையும் பொய்ப் பவுஷோ டுழல்வது

விடவும்பர்க் கரிதா மிணையடி

தருவாயே

திகுதந்தித் திகுதோ திகுதிகு

திகுதந்தித் திகுதோ திகுதிகு

திகுர் தஞ்செச் செகசே செககண

எனபேரிக்

திமிர்தங்கற் குவடோ டெழுகட

லொலிகொண்டற் றுருவோ டலறிட

திரள்சண்டத் தவுணோர் பொடிபட

விடும்வேலா

அகரம்பச் சுருவோ டொளியுறை

படிகம்பொற் செயலா ளரனரி

அயனண்டர்க் கரியா ளுமையருள்

முருகோனே

அமுர்தம்பொற் குவடோ டிணைமுலை

மதிதுண்டப் புகழ்மான் மகளொடும்

அருள் செம்பொற் புலியூர் மருவிய

பெருமாளே.

பாடல் 500 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தனனதந்தம் தனனதந்தம்

தனனதந்தம் தானந்தம்

------ 3 முறை ------

தனதான

சகுடமுந்துங் கடலடைந்துங்

குளமகிழ்ந்துந் தோய்சங்கங்

கமுகடைந்தண் டமுதகண்டந்

தரளகந்தந் தேர்கஞ்சஞ்

சரமெனுங்கண் குமிழதுண்டம்

புருவெனுஞ்செஞ் சாபம்பொன்

திகழ்மாதர்

சலசகெந்தம் புழுகுடன்சண்

பகமணங்கொண் டேய்ரண்டந்

தனகனம்பொன் கிரிவணங்கும்

பொறிபடுஞ்செம் பேர்வந்தண்

சலனசம்பொன் றிடைபணங்கின்

கடிதடங்கொண் டாரம்பொன்

தொடர்பாவை

புகலல்கண்டஞ் சரிகரம்பொன்

சரணபந்தந் தோதிந்தம்

புரமுடன்கிண் கிணிசிலம்பும்

பொலியலம்புந் தாள்ரங்கம்

புணர்வணைந்தண் டுவரொடுந்தொண்

டிடர்கிடந்துண் டேர்கொஞ்சுங்

கடைநாயேன்

புகழடைந்துன் கழல்பணிந்தொண்

பொடியணிந் தங்காநந்தம்

புனல்படிந்துண் டவசமிஞ்சுந்

தவசர்சந்தம் போலுந்திண்

புவனிகண்டின் றடிவணங்குஞ்

செயல்கொளஞ்செஞ் சீர்செம்பொன்

கழல்தாராய்

திகுடதிந்திந் தகுடதந்தந்

திகுடதிந்திந் தோதிந்தம்

டகுடடண்டண் டிகுடடிண்டிண்

டகுடடண்டண் டோ டிண்டிண்

டிமுடடிண்டிண் டுமுடடுண்டுண்

டிமுடடிண்டென் றேசங்கம்

பலபேரி

செககணஞ்சஞ் சலிகைபஞ்சம்

பறைமுழங்கும் போரண்டஞ்

சிலையிடிந்துங் கடல்வடிந்தும்

பொடிபறந்துண் டோ ர்சங்கஞ்

சிரமுடைந்தண் டவுணரங்கம்

பிணமலைந்தன் றாடுஞ்செங்

கதிர்வேலா

அகிலஅண்டஞ் சுழலஎங்கும்

பவுரிகொண்டங் காடுங்கொன்

புகழ்விளங்குங் கவுரிபங்கன்

குருவெனுஞ்சிங் காரங்கொண்

டறுமுகம்பொன் சதிதுலங்குந்

திருபதங்கந் தாளன்றென்

றமரோோர்பால்

அலர்பொழிந்தங் கரமுகிழ்ந்தொண்

சரணமுங் கொண் டோ தந்தம்

புனைகுறம்பெண் சிறுமியங்கம்

புணர்செயங்கொண் டேயம்பொன்

அமைவிளங்கும் புலிசரம்பொன்

திருநடங்கொண் டார்கந்தம்

பெருமாளே.

பாடல் 501 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தாந்தன தானதன தாந்தன தானதன

தாந்தன தானதன

தனதான

சாந்துட னேபுழுகு தோய்ந்தழ கார்குழலை

மோந்துப யோதரம

தணையாகச்

சாய்ந்துப்ர தாபமுடன் வாழ்ந்த நுராகசுக

காந்தமொ டூசியென

மடவார்பால்

கூர்ந்தக்ரு பாமனது போந்துன தாள்குறுகி

ஓர்ந்துண ராவுணர்வி

லடிநாயேன்

கூம்பவிழ் கோகநக பூம்பத கோதிலிணை

பூண்டுற வாடுதின

முளதோதான்

பாந்தளின் மீதினிதி னோங்குக ணேதுயில்கொள்

நீண்டிடு மாலொடய

னறியாது

பாம்புரு வானமுநி வாம்புலி யானபதன்

ஏய்ந்தெதிர் காணநட

மிடுபாதர்

பூந்துணர் பாதிமதி வேய்ந்தச டாமகுட

மாங்கன காபுரியி

லமர்வாழ்வே

பூங்கமு கார்வுசெறி யூங்கந காபுரிசை

சூழ்ம்புலி யூரிலுறை

பெருமாளே.

பாடல் 502 ( சிதம்பரம் )

ராகம் - கௌளை; தாளம் - கண்டசாபு (2 1/2)

தனதனன தனதான தனதனன தனதான

தனதனன தனதான

தனதான

சுடரனைய திருமேனி யுடையழகு முதுஞான

சொருபகிரி யிடமேவு

முகமாறும்

சுரர்தெரிய லளிபாட மழலைகதி நறைபாய

துகிரிதழின் மொழிவேத

மணம்வீச

அடர்பவள வொளிபாய அரியபரி புரமாட

அயில்தரமொ டெழில்தோகை

மயிலேறி

அடியனிரு வினைநீறு படஅமர ரிதுபூரை

அதிசயமெ னருள்பாட

வரவேணும்

விடைபரவி அயன்மாலொ டமரர்முநி கணமோட

மிடறடைய விடம்வாரி

யருள்நாதன்

மினலனைய இடைமாது இடமருவு குருநாதன்

மிகமகிழ அநுபூதி

யருள்வோனே

இடர்கலிகள் பிணியோட எனையுமருள் குறமாதி

னிணையிளநிர் முலைமார்பி

னணைமார்பா

இனியமுது புலிபாத னுடனரவு சதகோடி

யிருடியர்கள் புகழ்ஞான

பெருமாளே.

பாடல் 503 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தத்ததன தானதன தானதன தானதன

தத்ததன தானதன தானதன தானதன

தத்ததன தானதன தானதன தானதன

தனதான

தத்தைமயில் போலுமியல் பேசிபல மோகநகை

யிட்டுமுட னாணிமுலை மீதுதுகில் மூடியவர்

சற்றவிடம் வீடுமினி வாருமென வோடிமடி

பிடிபோல

தைச்சரச மோடுறவெ யாடியக மேகொடுபொ

யெத்தியணை மீதிலிது காலமெனிர் போவதென

தட்டுபுழு கோடுபனி நீர்பலச வாதையவ

ருடல்பூசி

வைத்துமுக மோடிரச வாயிதழி னு�றல்பெரு

கக்குழல ளாவசுழல் வாள்விழிக ளேபதற

வட்டமுலை மார்புதைய வேர்வைதர தோளிறுகி

யுடைசோர

மச்சவிழி பூசலிட வாய்புலியு லாசமுட

னொப்பியிரு வோருமயல் மூழ்கியபின் ஆபரணம்

வைத்தடகு தேடுபொருள் சூறைகொளு வார்கலவி

செயலாமோ

சத்திசர சோதிதிரு மாதுவெகு ரூபிசுக

நித்தியகல் யாணியெனை யீணமலை மாதுசிவை

தற்பரனொ டாடுமபி ராமிசிவ காமியுமை

யருள்பாலா

சக்ரகிரி ரூரிமக மேருகடல் தூளிபட

ரத்நமயி லேறிவிளை யாடியசு ராரைவிழ

சத்தியினை யேவிஅம ரோர்கள்சிறை மீளநட

மிடுவோனே

துத்திதன பாரவெகு மோகசுக வாரிமிகு

சித்ரமுக ரூபியென தாயிவளி நாயகியை

சுத்தஅணை யூடுவட மாமுலைவி டாதகர

மணிமார்பா

சுத்தவம காதவசி காமணியெ னோதுமவர்

சித்தமதி லேகுடிய தாவுறையும் ஆறுமுக

சுப்ரமணி யாபுலியுர் மேவியுறை தேவர்புகழ்

பெருமாளே.



பாடல் 504 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தத்த தத்தன தான தானன

தத்த தத்தன தான தானன

தத்த தத்தன தான தானன

தனதான

துத்தி பொற்றன மேரு வாமென

வொத்தி பத்திரள் வாகு வாயவிர்

துப்பு முத்தொடு மார்பினாடிட

மயில்போலே

சுக்கை மைக்குழ லாட நூலிடை

பட்டு விட்டவிர் காம னாரல்குல்

சுற்று வித்துறு வாழை சேர்தொடை

விலைமாதர்

தத்தை பட்குர லோசை நூபுர

மொத்த நட்டமொ டாடி மார்முலை

சற்ற சைத்துகு லாவும் வேசிய

ரவரோடே

தர்க்க மிட்டுற வாடி யீளைநொய்

கக்கல் விக்கல்கொ ளூளை நாயென

சிச்சி சிச்சியெ னால்வர் கூறிட

வுழல்வேனோ

தித்தி மித்திமி தீத தோதக

தத்த னத்தன தான தீதிமி

திக்கு முக்கிட மூரி பேரிகை

தவில்போடச்

சித்ர வித்தைய ராட வானவர்

பொற்பு விட்டிடு சேசெ சேயென

செக்கு விட்டசு ரோர்கள் தூள்பட

விடும்வேலா

செத்தி டச்சம னார்க டாபட

அற்று தைத்தசு வாமி யாரிட

சித்தி ரச்சிவ காமி யாரருள்

முருகோனே

தெற்க ரக்கர்கள் தீவு நீறிட

விட்ட அச்சுத �ணன மானொடு

சித்தி ரப்புலி யூரில் மேவிய

பெருமாளே.

பாடல் 505 ( சிதம்பரம் )

ராகம் - ஷண்முகப்ரியா; தாளம் - ஸங்கீர்ண சாபு (4 1/2)

தகதிமி-2, தகிட-1 1/2, தக-1

தானா தனத்ததன தானா தனத்ததன

தானா தனத்ததன

தனதான

நாடா பிறப்புமுடி யாதோ வெனக்கருதி

நாயே னரற்றுமொழி

வினையாயின்

நாதா திருச்சபையி னேறாது சித்தமென

நாலா வகைக்குமுன

தருள்பேசி

வாடா மலர்ப்பதவி தாதா எனக்குழறி

வாய்பாறி நிற்குமெனை

அருள்கூர

வாராய் மனக்கவலை தீராய் நினைத்தொழுது

வாரே னெனக்கெதிர் முன்

வரவேணும்

சூடா மணிப்பிரபை ரூபா கனத்தவரி

தோலா சனத்தியுமை

யருள்பாலா

தூயா துதித்தவர்கள் நேயா வெமக்கமிர்த

தோழா கடப்பமல

ரணிவோனே

ஏடார் குழற்சுருபி ஞானா தனத்திமிகு

மேராள் குறத்திதிரு

மணவாளா

ஈசா தனிப்புலிசை வாழ்வே சுரர்த்திரளை

ஈடேற வைத்தபுகழ்

பெருமாளே.

பாடல் 506 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தானதன தத்த தந்தன தானதன தத்த தந்தன

தானதன தத்த தந்தன

தந்ததான

நாலுசது ரத்த பஞ்சறை மூலகம லத்தி லங்கியை

நாடியின டத்தி மந்திர

பந்தியாலே

நாரண புரத்தி லிந்துவி னுடுற இணக்கி நன்சுடர்

நாறிசை நடத்தி மண்டல

சந்தியாறிற்

கோலமு முதிப்ப கண்டுள நாலினை மறித்தி
தம்பெறு

கோவென முழக்கு சங்கொலி

விந்துநாதங்

கூடிய முகப்பி லிந்திர வானவமு தத்தை
யுண்டொரு

கோடிநட னப்ப தஞ்சபை

யென்றுசேர்வேன்

ஆலமல ருற்ற சம்பவி வேரிலி குலக்கொ ழுந்திலி

ஆரணர் தலைக்க லங்கொளி

செம்பொன்வாசி

ஆணவ மயக்க முங்கலி காமிய மகற்றி யென்றனை

ஆளுமை பரத்தி சுந்தரி

தந்தசேயே

வேலதை யெடுத்து மிந்திரர் மால்விதி பிழைக்க வஞ்சகர்

வீடெரி கொளுத்தி யெண்கட

லுண்டவேலா

வேசது ரத்தர் தென்புலி யூருறை யொருத்தி பங்கினர்

வீறுநட னர்க்கி சைந்தருள்

தம்பிரானே.

பாடல் 507 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தானத்தன தானத்தன தானத்தன தானத்தன

தானத்தன தானத்தன

தனதான

நீலக்குழ லார்முத்தணி வாய்சர்க்கரை யார்தைப்பிறை

நீளச்சசி யார்பொட்டணி

நுதல்மாதர்

நீலக்கய லார்பத்திர வேலொப்பிடு வார்நற்கணி

நேமித்தெழு தாசித்திர

வடிவார்தோள்

ஆலைக்கழை யார்துத்திகொ ளாரக்குவ டார்கட்டளை

யாகத்தமி யேனித்தமு

முழல்வேனோ

ஆசைப்பத மேல்புத்திமெய் ஞானத்துட னேபத்திர

மாகக்கொள வேமுத்தியை

யருள்வாயே

மாலைக்குழ லாளற்புத வேதச்சொரு பாளக்கினி

மார்பிற்பிர காசக்கிரி

தனபார

வாசக்குயி லாள்நற்சிவ காமச்செய லாள்பத்தினி

மாணிக்கமி னாள்நிஷ்கள

உமைபாகர்

சூலக்கையி னாரக்கினி மேனிப்பர னாருக்கொரு

சோதிப்பொருள் கேள்விக்கிடு

முருகோனே

சோதிப்பிர காசச்செய லாள்முத்தமிழ்
மானைப்புணர்

சோதிப்புலி யூர்நத்திய

பெருமாளே.

பாடல் 508 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தனனா தத்தன தனனா தத்தன

தனனா தத்தன

தனதான

பனிபோ லத்துளி சலவா யுட்கரு

பதின்மா தத்திடை

தலைகீழாய்ப்

படிமே விட்டுடல் தவழ்வார் தத்தடி

பயில்வா ருத்தியில்

சிலநாள்போய்த்

தனமா தர்க்குழி விழுவார் தத்துவர்

சதிகா ரச்சமன்

வருநாளிற்

றறியா ரிற்சடம் விடுவா ரிப்படி

தளர்மா யத்துய

ரொழியாதோ

வினைமா யக்கிரி பொடியா கக்கடல்

விகடா ருக்கிட

விடும்வேலா

விதியோ னைச்சது முடிநால் பொட்டெழ

மிகவே குட்டிய

குருநாதா

நினைவோர் சித்தமொ டகலா மற்புகு

நிழலாள் பத்தினி

மணவாளா

நிதியா மிப்புவி புலியூ ருக்கொரு

நிறைவே பத்தர்கள்

பெருமாளே.

பாடல் 509 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தனதன தனதன தான தாத்தன

தனதன தனதன தான தாத்தன

தனதன தனதன தான தாத்தன

தனதான

மகரமொ டுறுகுழை யோலை காட்டியு

மழைதவழ் வனைகுழல் மாலை காட்டியும்

வரவர வரஇத ழூற லு�ட்டியும்

வலைவீசும்

மகரவி ழிமகளிர்

பாடல் வார்த்தையில்

வழிவழி யொழுகுமு பாய வாழ்க்கையில்

வளமையி லிளமையில் மாடை வேட்கையில்

மறுகாதே

இகலிய பிரமக பால பாத்திர

மெழில்பட இடுதிரு நீறு சேர்த்திற

மிதழியை யழகிய வேணி யார்த்ததும்

விருதாக

எழில்பட மழுவுடன் மானு மேற்றது

மிசைபட இசைதரு ஆதி தோற்றமு

மிவையிவை யெனவுப தேச மேற்றுவ

தொருநாளே

ஜகதல மதிலருள் ஞான வாட்கொடு

தலைபறி யமணர்ச மூக மாற்றிய

தவமுனி சகமுளர் பாடு பாட்டென

மறைபாடி

தரிகிட தரிகிட தாகு டாத்திரி

கிடதரி கிடதரி தாவெ னாச்சில

சபதமொ டெழுவன தாள வாச்சிய

முடனேநீள்

அகுகுகு குகுவென ஆளி வாய்ப்பல

அலகைக ளடைவுட னாடு மாட்டமு

மரனவ னுடனெழு காளி கூட்டமு

மகலாதே

அரிதுயில் சயனவி யாள மூர்த்தனு

மணிதிகழ் மிகுபுலி யூர்வி யாக்ரனு

மரிதென முறைமுறை யாடல் காட்டிய

பெருமாளே.

பாடல் 510 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தத்த தத்த தாத்த தத்த தத்த தாத்த

தத்த தத்த தாத்த

தனதான

மச்ச மெச்சு சூத்ரம் ரத்த பித்த மூத்ரம்

வைச்சி றைச்ச பாத்ர

மநுபோகம்

மட்க விட்ட சேக்கை உட்பு ழுத்த வாழ்க்கை

மட்டு லப்ப தார்த்த

மிடிபாறை

எய்ச்சி ளைச்ச பேய்க்கு மெய்ச்சி ளைச்ச நாய்க்கு

மெய்ச்சி ளைச்ச ஈக்கு

மிரையாகும்

இக்க டத்தை நீக்கி அக்க டத்து ளாக்கி

இப்படிக்கு மோக்ஷ

மருள்வாயே

பொய்ச்சி னத்தை மாற்றி மெய்ச்சி னத்தை யேற்றி

பொற்ப தத்து ளாக்கு

புலியூரா

பொக்க ணத்து நீற்றை யிட்டொ ருத்த னார்க்கு

புத்தி மெத்த காட்டு

புனவேடன்

பச்சி லைக்கும் வாய்க்கு ளெச்சி லுக்கும் வீக்கு

பைச்சி லைக்கு மாட்கொ

ளரன்வாழ்வே

பத்தி சித்தி காட்டி அத்தர் சித்த மீட்ட

பத்த ருக்கு வாய்த்த

பெருமாளே.

பாடல் 511 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தனன தந்தன தந்த தானன

தனன தந்தன தந்த தானன

தனன தந்தன தந்த தானன

தந்ததான

மதிய மண்குண மஞ்சு நால்முக

நகர முன்கலை கங்கை நால்குண

மகர முன்சிக ரங்கி மூணிடை

தங்குகோண

மதன முன்தரி சண்ட மாருத

மிருகு ணம்பெறி லஞ்செ லோர்தெரு

வகர மிஞ்சிய கன்ப டாகமொ

ரென்றுசேறுங்

கதிர டங்கிய அண்ட கோளகை

யகர நின்றிடும் ரண்டு கால்மிசை

ககன மின்சுழி ரண்டு கால்பரி

கந்துபாயுங்

கருணை யிந்திரி யங்கள் சோதிய

அருண சந்திர மண்ட லீகரர்

கதிகொள் யந்திர விந்து நாதமொ

டென்றுசேர்வேன்

அதிர பம்பைகள் டங்கு டாடிக

முதிர அண்டமொ டைந்து பேரிகை

டகுட டண்டட தொந்த தோதக

என்றுதாளம்

அதிக விஞ்சையர் தும்ப்ரு நார்தரோ

டிதவி தம்பெறு சிந்து பாடிட

அமரர் துந்துமி சங்கு தாரைகள்

பொங்கவூடு

உதிர மண்டல மெங்கு மாயொளி

யெழகு மண்டியெ ழுந்து சூரரை

உயர்ந ரம்பொடெ லும்பு மாமுடி

சிந்திவீழ

உறுசி னங்கொடெ திர்ந்த சேவக

மழைபு குந்துய ரண்டம் வாழ்வுற

வுரகு னும்புலி கண்ட வூர்மகிழ்

தம்பிரானே.

பாடல் 512 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தனன தனதன தனன தனதன

தனன தனதன தனன தனதன

தத்தத் தத்தன தத்தத் தத்தன

தத்தத் தத்தன தத்தத் தத்தன

--------- 3 முறை ---------

தனதான

மருவு கடல்முகி லனைய குழல்மதி

வதன நுதல்சிலை பிறைய தெணும்விழி

மச்சப் பொற்கணை முக்குப் பொற்குமி

ழொப்பக் கத்தரி யொத்திட் டச்செவி

குமுத மலரித ழமுத மொழிநிரை

தரள மெனுநகை மிடறு கமுகென

வைத்துப் பொற்புய பச்சைத் தட்டையொ

டொப்பிட் டுக்கம லக்கைப் பொற்றுகிர்

வகைய விரலொடு கிளிகள் முகநக

மெனவு மிகலிய குவடு மிணையென

வட்டத் துத்திமு கிழ்ப்பச் சக்கிரம்

வைத்தப் பொற்குட மொத்திட் டுத்திகழ்

முலைமேவும்

வடமு நிரைநிரை தரள பவளமொ

டசைய பழுமர இலைவ யிறுமயி
ரற்பத் திக்கிணை பொற்புத் தொப்புளும்
அப்புக் குட்சுழி யொத்துப் பொற்கொடி
மதன னுருதுடி யிடையு மினலென
அரிய கடிதட மமிர்த கழைரச
மட்டுப் பொற்கம லத்திற் சக்கிரி
துத்திப் பைக்கொரு மித்துப் பட்டுடை
மருவு தொடையிணை கதலி பரடுகொள்
கணையு முழவென கமட மெழுதிய
வட்டப் புத்தக மொத்துப் பொற்சர
ணத்திற் பிற்புற மெத்துத் தத்தைகள்
மயில்போலே
தெருவில் முலைவிலை யுரைசெய் தவரவர்
மயல்கொ டணைவர மருள்செய் தொழில்கொடு
தெட்டிப் பற்பல சொக்கிட் டுப்பொருள்
பற்றிக் கட்டில ணைக்கொப் பிப்புணர்
திலத மழிபட விழிகள் சுழலிட
மலர்க ளணைகுழ லிடைகொள் துகில்பட
தித்தித் துப்பிதழ் வைத்துக் கைக்கொடு
கட்டிக் குத்துமு லைக்குட் கைப்பட
திரையி லமுதென கழையில் ரசமென

பலவில் சுளையென வுருக வுயர்மயல்
சிக்குப் பட்டுடல் கெட்டுச் சித்தமும்
வெட்கித் துக்கமு முற்றுக் கொக்கென
நரைமேவிச்
செவியொ டொளிர்விழி மறைய மலசல
மொழுக பலவுரை குழற தடிகொடு
தெத்திப் பித்தமு முற்றித் தற்செய
லற்றுச் சிச்சியெ னத்துக் கப்பட
சிலர்கள் முதுவுடல் வினவு பொழுதினி
லுவரி நிறமுடை நமனு முயிர்கொள
செப்பற் றுப்பிண மொப்பித் துப்பெய
ரிட்டுப் பொற்பறை கொட்டச் செப்பிடு
சென்ன மிதுவென அழுது முகமிசை
அறைய அணைபவ ரெடென சுடலையில்
சிற்றிக் குக்கிரை யிட்டிட் டிப்படி
நித்தத் துக்கமெ டுத்திட் டுச்சட
முழல்வேனோ
குருவி னுருவென அருள்செய் துறையினில்
குதிரை கொளவரு நிறைத வசிதலை
கொற்றப் பொற்பதம் வைத்திட் டற்புத
மெற்றிப் பொற்பொரு ளிட்டுக் கைக்கொளு

முதல்வ ரிளகலை மதிய மடைசடை

அருண வுழைமழு மருவு திருபுயர்

கொட்டத் துப்புரர் கெட்டுப் பொட்டெழ

விட்டத் திக்கணை நக்கர்க் கற்புத

குமர னெனவிரு தொலியு முரசொடு

வளையு மெழுகட லதிர முழவொடு

கொட்டத் துட்டரை வெட்டித் தட்கட

லொப்பத் திக்கும டுத்துத் தத்திட

அமர்மேவிக்

குருகு கொடிசிலை குடைகள் மிடைபட

மலைகள் பொடிபட வுடுக ளுதிரிட

கொத்திச் சக்கிரி பற்றப் பொற்பரி

எட்டுத் திக்குமெ டுத்திட் டுக்குரல்

குமர குருபர குமர குருபர

குமர குருபர எனவோ தமரர்கள்

கொட்பப் புட்பமி றைத்துப் பொற்சர

ணத்திற் கைச்சிரம் வைத்துக் குப்பிட

குலவு நரிசிறை கழுகு கொடிபல

கருட னடமிட குருதி பருகிட

கொற்றப் பத்திர மிட்டுப் பொற்கக

னத்தைச் சித்தமி ரக்ஷித் துக்கொளு

மயில்வீரா

சிரமொ டிரணிய னுடல்கி ழியவொரு

பொழுதி னுகிர்கொடு அரியெ னடமிடு

சிற்பர்த் திட்பதம் வைத்துச் சக்கிர

வர்த்திக் குச்சிறை யிட்டுச் சுக்கிரன்

அரிய விழிகெட இருப தமுமுல

கடைய நெடியவர் திருவு மழகியர்

தெற்குத் திக்கில ரக்கர்க் குச்சின

முற்றுப் பொற்றசர் தற்குப் புத்திர

செயமு மனவலி சிலைகை கொடுகர

மிருப துடைகிரி சிரமொர் பதும்விழ

திக்கெட் டைக்கக னத்தர்க் குக்கொடு

பச்சைப் பொற்புய லுக்குச் சித்திர

மருகோனே

திலத மதிமுக அழகி மரகத

வடிவி பரிபுர நடனி மலர்பத

சித்தர்க் குக்குறி வைத்திட் டத்தன்

முத்தப் பொற்கிரி யொத்தச் சித்திர

சிவைகொள் திருசர சுவதி வெகுவித

சொருபி முதுவிய கிழவி யியல்கொடு

செட்டிக் குச்சுக முற்றத் தத்துவ

சித்திற் சிற்பதம் வைத்தக் கற்புறு

திரையி லமுதென மொழிசெய் கவுரியி

னரிய மகனென புகழ்பு லிநகரில்

செப்புப் பொற்றன முற்றப் பொற்குற

தத்தைக் குப்புள கித்திட் டொப்பிய

பெருமாளே.

பாடல் 513 ( சிதம்பரம் )

ராகம் - கல்யாணி; தாளம் - ஆதி

தனனா தனத்ததன தனனா தனத்ததன

தனனா தனத்ததன

தனதானா

மனமே உனக்குறுதி புகல்வே னெனக்கருகில்

வருவா யுரைத்தமொழி

தவறாதே

மயில்வாக னக்கடவுள் அடியார் தமக்கரசு

மனமாயை யற்றசுக

மதிபாலன்

நினைவே துனக்கமரர் சிவலோக மிட்டுமல

நிலைவே றறுக்கவல

பிரகாசன்

நிதிகா நமக்குறுதி அவரே பரப்பிரம

நிழலாளி யைத்தொழுது

வருவாயே

இனமோ தொருத்திருபி நலமேர் மறைக்கரிய

இளையோ ளொரொப்புமிலி

நிருவாணி

எனையீ ணெடுத்தபுகழ் கலியாணி பக்கமுறை

யிதழ்வேணி யப்பனுடை

குருநாதா

முனவோர் துதித்து மலர் மழைபோ லிறைத்துவர

முதுசூ ரரைத்தலை கொள்

முருகோனே

மொழிபாகு முத்துநகை மயிலாள் தனக்குருகு

முருகா தமிழ்ப்புலியுர்

பெருமாளே.

பாடல் 514 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தத்த தானன தத்தன தானன

தத்த தானன தத்தன தானன

தத்த தானன தத்தன தானன

தனதான

முத்த மோகன தத்தையி னார்குர

லொத்த வாயித சர்க்கரை யார்நகை

முத்து வாரணி பொற்குவ டார்முலை

விலைமாதர்

மொக்கை போகசெ குத்திடு வார்பொருள்

பற்றி வேறும ழைத்திடு வார்சிலர்

முச்ச லீலிகை சொக்கிடு வாரிடர்

கலிசூழச்

சித்தி லாடஅ ழைத்திடு வார்கவ

டுற்ற மாதர்வ லைப்புகு நாயெனை

சித்தி ஞானம்வெ ளிப்பட வேசுடர்

மடமீதே

சித்தெ லாமொரு மித்துன தாறினம்

வைத்து நாயென ருட்பெற வேபொருள்

செப்பி யாறும கப்பரி வோடுணர்

வருள்வாயே

தத்த னானத னத்தன தானெனு

டுக்கை பேரிமு ழக்கிட வேகடல்

சத்த தீவுத யித்தியர் மாளிட

விடும்வேலா

சத்தி லோகப ரப்பர மேசுர

நிர்த்த மாடுக ழற்கரு ணாகர

தற்ப ராபர நித்தனொர் பாலுறை

யுமைபாலா

துத்தி மார்முலை முத்தணி மோகன

பொற்ப்ர காசமு ளக்குற மான்மகள்

துப்பு வாயிதழ் வைத்தணை சோதிபொன்

மணிமார்பா

சுட்டி நீலஇ ரத்தின மாமயி

லுற்று மேவிய ருட்புலி யூர்வளர்

சுத்த னேசசி பெற்றபெ ணாயகி

பெருமாளே.

பாடல் 515 ( சிதம்பரம் )

ராகம் - ஹிந்தோளம் ; தாளம் - ஆதி

தனதனன தான தனதனன தான

தனதனன தானத்

தனதானா

பரமகுரு நாத கருணையுப தேச

பதவிதரு ஞானப்

பெருமாள்காண்

பகலிரவி லாத ஒளிவெளியில் மேன்மை

பகருமதி காரப்

பெருமாள்காண்

திருவளரு நீதி தினமனொக ராதி

செகபதியை யாளப்

பெருமாள்காண்

செகதலமும் வானு மருவையவை பூத

தெரிசனைசி வாயப்

பெருமாள்காண்

ஒருபொருள தாகி அருவிடையை யூரு

முமைதன்மண வாளப்

பெருமாள்காண்

உகமுடிவு கால மிறுதிகளி லாத

உறுதியநு பூதிப்

பெருமாள்காண்

கருவுதனி லு[illegible]று மருவினைகள் மாய

கலவிபுகு தாமெய்ப்

பெருமாள்காண்

கனகசபை மேவி அனவரத மாடு

கடவுள்செக சோதிப்

பெருமாளே.

பாடல் 516 ( சிதம்பரம் )

ராகம் - ; தாளம் -

தந்தனா தான தானன தந்தனா தான தானன

தந்தனா தான தானன

தனதான

வஞ்சமே கோடி கோடிகள் நெஞ்சமே சேர மேவிய

வன்கணா ரார வாரமு

மருள்வோராய்

வம்பிலே வாது கூறிகள் கொஞ்சியே காம லீலைகள்

வந்தியா ஆசை யேதரு

விலைமாதர்

பஞ்சமா பாவ மேதரு கொங்கைமேல் நேச
மாய்வெகு

பஞ்சியே பேசி நாடொறு

மெலியாதே

பந்தியாய் வானு ளோர்தொழ நின்றசீ ரேகு லாவிய

பண்புசேர் பாத தாமரை

யருள்வாயே

அஞ்சவே சூர னானவ னுய்ஞ்சுபோ காம லேயயில்

அன்றுதா னேவி வானவர்

சிறைமீள

அன்பினோ டேம னோரத மிஞ்சமே லான வாழ்வருள்

அண்டர்கோ வேப ராபர

முதல்வோனே

கொஞ்சவே காலின் மேவுச தங்கைதா னாட ஆடிய

கொன்றையா னாளு மேமகிழ்

புதல்வோனே

கொந்துசேர் சோலை மேவிய குன்றுசூழ் வாக வேவரு

குன்றுதோ றாடல் மேவிய

பெருமாளே.

பாடல் 517 ( கயிலைமலை )

ராகம் - ; தாளம் -

தனதன தனனத் தான தனதன தனனத் தான

தனதன தனனத் தான

தனதான

திருநில மருவிக் காலி னிருவழி யடைபட் டோ டி

சிவவழி யுடனுற் றேக

பரமீதே

சிவசுட ரதனைப் பாவை மணமென மருவிக் கோல

திரிபுர மெரியத் தீயி

னகைமேவி

இருவினை பொரியக் கோல திருவரு ளுருவத் தேகி

யிருள்கதி ரிலிபொற் பூமி

தவசூடே

இருவரு முருகிக் காய நிலையென மருவித் தேவ

ரிளையவ னெனவித் தார

மருள்வாயே

பரிபுர கழலெட் டாசை செவிடுகள் படமுத் தேவர்

பழமறை பணியச் சூல

மழுமானும்

பரிவொடு சுழலச் சேடன் முடிநெறு நெறெனக்
கோவு

பரியினை மலர்விட் டாடி

அடியொர்கள்

அரஹர வுருகிச் சேசெ யெனதிரு நடனக் கோல

மருள்செயு முமையிற் பாக

ரருள்பாலா

அலரணி குழல்பொற் பாவை திருமக ளமளிப்
போரொ

டடியவர் கயிலைக் கான

பெருமாளே.

பாடல் 518 ( கயிலைமலை )

ராகம் - தோடி; தாளம் - கண்டசாபு (2 1/2)

தானந் தனத்ததன தானந் தனத்ததன

தானந் தனத்ததன

தனதான

தேனுந்து முக்கனிகள் பால்செங் கருப்பிளநிர்

சீரும் பழ�த்தசிவ

ம ளூறத்

தீதும் பிடித்தவினை யேதும் பொடித்துவிழ

சீவன் சிவச்சொருப

மெனதேறி

நானென்ப தற்றுயிரொ டூனென்ப தற்றுவெளி

நாதம் பரப்பிரம

வொளிமீதே

ஞானஞ் சுரப்பமகி ழாநந்த சித்தியொடெ

நாளுங் களிக்கபத

மருள்வாயே

வானந் தழைக்கஅடி யேனுஞ் செழிக்கஅயன்

மாலும் பிழைக்கஅலை

விடமாள

வாருங் கரத்தனெமை யாளுந் தகப்பன்மழு

மானின் கரத்தனருள்

முருகோனே

தானந் தனத்ததன னாவண்டு சுற்றிமது

தானுண் கடப்பமல

ரணிமார்பா

தானங் குறித்துஎமை யாளுந் திருக்கயிலை

சாலுங் குறத்திமகிழ்

பெருமாளே.

பாடல் 519 ( கயிலைமலை )

ராகம் - ; தாளம் -

தனத்த தனத்த தனத்த தனத்த

தனத்த தனத்த

தனதான

நகைத்து வுருக்கி விழித்து மிரட்டி

நடித்து விதத்தி

லதிமோகம்

நடத்து சமத்தி முகத்தை மினுக்கி

நலத்தி லணைத்து

மொழியாலுந்

திகைத்த வரத்தி லடுத்த பொருட்கை

திரட்டி யெடுத்து

வரவேசெய்

திருட்டு முலைப்பெண் மருட்டு வலைக்குள்

தெவிட்டு கலைக்குள்

விழுவேனோ

பகைத்த அரக்கர் சிரத்தை யறுத்து

படர்ச்சி கறுத்த

மயிலேறிப்

பணைத்த கரத்த குணத்த மணத்த

பதத்த கனத்த

தனமாதை

மிகைத்த புனத்தி லிருத்தி யணைத்து

வெளுத்த பொருப்பி

லுறைநாதா

விரித்த சடைக்கு ளொருத்தி யிருக்க

ம்ருகத்தை யெடுத்தொர்

பெருமாளே.

பாடல் 520 ( கயிலைமலை )

ராகம் - ; தாளம் -

தனன தந்தன தானனா தனதனன

தனன தந்தன தானனா தனதனன

தனன தந்தன தானனா தனதனன

தனதான

பனியின் விந்துளி போலவே கருவினுறு

மளவி லங்கொரு சூசமாய் மிளகுதுவர்

பனைதெ னங்கனி போலவே பலகனியின்

வயறாகிப்

பருவ முந்தலை கீழதாய் நழுவிநில

மருவி யொன்பது வாசல்சே ருருவமுள

பதுமை யின்செயல் போலவே வளிகயிறி

னுடனாடி

மனவி தந்தெரி யாமலே மலசலமொ

டுடல்ந கர்ந்தழு தாறியே அனைமுலையின்

மயம யின்றொரு பாலனா யிகமுடைய

செயல்மேவி

வடிவ முன்செய்த தீமையா லெயுமுனையும்

அறம றந்தக மீதுபோய் தினதினமு

மனம ழிந்துடல் நாறினே னினியுனது

கழல்தாராய்

தனன தந்தன தானனா தனதனன

தினன திந்தன தீததோ திகுததிகு

தகுத குந்ததி தாகுதோ வெனமுழவு

வளைபேரி

தவில்க ணம்பறை காளமோ டிமிலைதொனி

யினமு ழங்கெழு வேலைபோ லதிரபொரு

சமர்மு கங்களின் மேவியே விருதுசொலு

மவுணோர்கள்

சினம ழிந்திட தேர்கள் தோலரிபரிகள்

குருதி யெண்டிசை மூடவே அலகைநரி

சிறையி னங்களி கூரவே நகையருளி

விடும்வேலா

சிவன்ம கிழ்ந்திரு ளானைமா முகன்மருவி

மனம கிழ்ந்தருள் கூரவோர் கயிலைமகிழ்

திகழ்கு றிஞ்சியின் மாதுமால் மருவுபுகழ்

பெருமாளே.

பாடல் 521 ( கயிலைமலை )

ராகம் - அடானா; தாளம் - கண்டசாபு (2 1/2)

தனதனனத்

தனதான

புமியதனிற்

ப்ரபுவான

புகலியில்வித்

தகர்போல

அமர்தகவித்

தொடைபாட

அடிமைதனக்

கருள்வாயே

சமரிலெதிர்த்

தசுர்மாளத்

தனியயில்விட்

டருள்வோனே

நமசிவயப்

பொருளானே

ரசதகிரிப்

பெருமாளே.

பாடல் 522 ( கயிலைமலை )

ராகம் - ; தாளம் -

தனத்தத் தனத்த தத்த தனத்தத் தனத்த தத்த

தனத்தத் தனத்த தத்த

தனதான

முகத்தைப் பிலுக்கி மெத்த மினுக்கித் தொடைத்து ரத்ந

முலைக்கச் சவிழ்த்த சைத்து

முசியாதே

முழுக்கக் கழப்பி யெத்தி மழுப்பிப் பொருட்ப றித்து

மொழிக்குட் படுத்த ழைத்த

மளிமீதே

நகைத்திட் டழுத்தி முத்த மளித்துக் களித்து மெத்த

நயத்திற் கழுத்தி றுக்கி

யணைவார்பால்

நடுக்குற் றவர்க்கு மெத்த மனத்தைப் பெருக்க வைத்து

நயத்துக் தியக்கி நித்த

மழிவேனோ

செகக்கச் செகக்க செக்க தரிக்கத் தரிக்க தக்க

திமித்தித் திமித்தி தித்தி

யெனஆடும்

செகத்துக் கொருத்தர் புத்ர நினைத்துத் துதித்த பத்த

ஜெனத்துக் கினித்த சித்தி

யருள்வோனே

மிசைத்துத் திடத்தொ டுற்று அசைத்துப் பொறுத்த ரக்கன்

மிகுத்துப் பெயர்த்தெ டுத்த

கயிலாய

மிசைக்குற் றடுத்து மற்ற பொருப்பைப் பொடித்தி டித்து

மிதித்துத் துகைத்து விட்ட

பெருமாளே.

பாடல் 523 ( ஸ்ரீ சைலம் திருமலை )

ராகம் - பிலஹரி ; தாளம் - ஆதி

(எடுப்பு - 1/2 இடம்)

தனதன தனதன தனதன தனதன

தனதன தனதன

தனதான

ஒருபது மிருபது மறுபது முடனறு

முணர்வுற இருபத

முளநாடி

உருகிட முழுமதி தழலென வொளிதிகழ்

வெளியொடு வொளிபெற

விரவாதே

தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து

திரிதொழி லவமது

புரியாதே

திருமகள் மருவிய திரள்புய அறுமுக

தெரிசனை பெறஅருள்

புரிவாயே

பரிவுட னழகிய பழமொடு கடலைகள்

பயறொடு சிலவகை

பணியாரம்

பருகிடு பெருவயி றுடையவர் பழமொழி

எழுதிய கணபதி

யிளையோனே

பெருமலை யுருவிட அடியவ ருருகிட

பிணிகெட அருள்தரு

குமரேசா

பிடியொடு களிறுகள் நடையிட கலைதிரள்

பிணையமர் திருமலை

பெருமாளே.

பாடல் 524 ( திருவேங்கடம் )

ராகம் - முகாரி ; தாளம் - அங்கதாளம் (6 1/2)

தகதிமிதக-3, தகதிமி-2, தகிட-1 1/2

தனத்ததன தனதன தனந்த

தனத்ததன தனதன தனந்த

தனத்ததன தனதன தனந்த

தனதான

கறுத்ததலை வெளிறு மிகுந்து

மதர்த்த இணை விழிகள் குழிந்து

கதுப்பிலுறு தசைகள் வறண்டு

செவிதோலாய்க்

கழுத்தடியு மடைய வளைந்து

கனத்தநெடு முதுகு குனிந்து

கதுப்புறுப லடைய விழுந்து

தடுநீர்சோர்

உறக்கம்வரு மளவி லெலும்பு

குலுக்கிவிடு மிருமல் தொடங்கி

உரத்தகன குரலு நெரிந்து

தடிகாலாய்

உரத்தநடை தளரு முடம்பு

பழுத்திடுமுன் மிகவும் விரும்பி

உனக்கடிமை படுமவர் தொண்டு

புரிவேனோ

சிறுத்தசெலு வதன ளிருந்து

பெருத்ததிரை யுததி கரந்து

செறித்தமறை கொணர நிவந்த

ஜெயமாலே

செறித்தவளை கடலில் வரம்பு

புதுக்கியிளை யவனோ டறிந்து

செயிர்த்தஅநு மனையு முகந்து

படையோடி

மறப்புரிசை வளையு மிலங்கை

யரக்கனொரு பதுமுடி சிந்த

வளைத்தசிலை விஜய முகுந்தன்

முருகோனே

மலர்க்கமல வடிவுள செங்கை

அயிற்குமர குகைவழி வந்த

மலைச்சிகர வடமலை நின்ற

பெருமாளே.

பாடல் 525 ( திருவேங்கடம் )

ராகம் - பிருந்தாவன ஸாரங்கா; தாளம் - ஆதி

(எடுப்பு - 1/2 இடம்)

தனதன தனதன தனதன தனதன

தனதன தனதன தனதன தனதன

தனதன தனதன தனதன தனதன

தனதான

சரவண பவநிதி யறுமக குருபர

சரவண பவநிதி யறுமக குருபர

சரவண பவநிதி யறுமக குருபர

எனவோதித்

தமிழினி லுருகிய வடியவ ரிடமுறு

சனனம ரணமதை யொழிவுற சிவமுற

தருபிணி துளவர மெமதுயிர் சுகமுற

வருள்வாயே

கருணைய விழிபொழி யொருதனி முதலென

வருகரி திருமுகர் துணைகொளு மிளையவ

கவிதைய முதமொழி தருபவ ருயிர்பெற

வருள்நேயா

கடலுல கினில்வரு முயிர்படு மவதிகள்

கலகமி னையதுள கழியவும் நிலைபெற

கதியுமு னதுதிரு வடிநிழல் தருவது

மொருநாளே

திரிபுர மெரிசெயு மிறையவ ரருளிய

குமரச மரபுரி தணிகையு மிகுமுயர்

சிவகிரி யிலும்வட மலையிலு முலவிய

வடிவேலா

தினமுமு னதுதுதி பரவிய அடியவர்

மனதுகு டியுமிரு பொருளிலு மிலகுவ

திமிரம லமொழிய தினகர னெனவரு

பெருவாழ்வே

அரவணை மிசைதுயில் நரகரி நெடியவர்

மருகனெ னவெவரு மதிசய முடையவ

அமலிவி மலிபரை உமையவ ளருளிய

முருகோனே

அதலவி தலமுதல் கிடுகிடு கிடுவென

வருமயி லினிதொளிர் ஷடுமையில் நடுவுற

அழகினு லனமரு மரகர சிவசிவ

பெருமாளே.

பாடல் 526 ( திருவேங்கடம் )

ராகம் - ; தாளம் -

தத்தத் தத்தத் தத்தத் தத்தத்

தத்தத் தத்தத் தனதான

தனத்த தனத்த தனத்த தனத்தன

தனதன தனதன தனதன தனதன

தனதன தனதன

தனதான

நெச்சுப் பிச்சிப் புட்பத் தட்பக்

கச்சிக் கச்சுற் றறன்மேவி

நெறித்து வெறித்து இருட்டை வெருட்டிய

நிரைதரு மருமலர் செருகிடு பரிமள

நிறையுறை மதுகர

நெடிதாடி

நிச்சிக் கச்சப் பட்டுச் சிக்கற்

றொப்புக் கொப்புக் குயர்வாகி

நெளித்த சுளித்த விழைக்கு ளழைத்துமை

நிகரென வகருவு முகுபுகை தொகுமிகு

நிகழ்புழு கொழுகிய

குழன்மேலும்

வச்ரப் பச்சைப் பொட்டிட் டப்பொட்

டுக்குட் செக்கர்ப் ப்ரபைபோல

வளைத்த தழைத்த பிறைக்கு முறைக்குமன்

மதசிலை யதுவென மகபதி தனுவென

மதிதில தமும்வதி

நுதன்மேலும்

மச்சச் செச்சைச் சித்ரச் சத்ரப்

பொற்பக் கத்திச் சையனாகி

மனத்தி னனைத்து மணைத்த துணைப்பத

மலரல திலைநிலை யெனமொழி தழியமெய்

வழிபட லொழிவனை

யருள்வாயே

நச்சுத் துச்சொப் பிச்சுக் குட்டத்

துட்டக் கட்டத் தசிகாண

நடத்தி விடத்தை யுடைத்த படத்தினில்

நடநவில் கடலிடை யடுபடை தொடுமுகில்

நகைமுக திருவுறை

மணிமார்பன்

நத்தத் தைச்சக் ரத்தைப் பத்மத்

தைக்கைப் பற்றிப் பொருமாய

னரிக்கு மரிக்கு மெரிக்கும் விருப்புற

நசிதரு நிசிசர ருடகுட லிடல்செய்த

நரகரி யொருதிரு

மருகோனே

கச்சுத் தச்சுப் பொற்கட் டிட்டுப்

பட்டுக் குட்பட் டமுதாலுங்

கருப்பி ரசத்து முருச்செய் துவைச்சிடு

கனதன பரிமள முழுகுப னிருபுய

கனகதி வியமணி

யணிமார்பா

கைச்சத் திக்குக் கெற்சித் தொக்கப்

பட்சிக் கக்கொட் டசுராதி

கறுத்த நிறத்த அரக்கர் குலத்தொடு

கறுவிய சிறியவ கடவைகள் புடைபடு

கடவட மலையுறை

பெருமாளே.

பாடல் 527 ( திருவேங்கடம் )

ராகம் - ; தாளம் -

தாந்தன தானதன தாந்தன தானதன

தாந்தன தானதன

தனதான

கோங்கிள நீரிளக வீங்குப யோதரமும்

வாங்கிய வேல்விழியும்

இருள்கூருங்

கூந்தலு நீள்வளைகொள் காந்தளு நூலிடையும்

மாந்தளிர் போல்வடிவும்

மிகநாடிப்

பூங்கொடி யார்கலவி நீங்கரி தாகிமிகு

தீங்குட னேயுழலும்

உயிர்வாழ்வு

பூண்டடி யேனெறியில் மாண்டிங னேநரகில்

வீழ்ந்தலை யாமலருள்

புரிவாயே

பாங்கியும் வேடுவரும் ஏங்கிட மாமுநியும்

வேங்கையு மாய்மறமி

னுடன்வாழ்வாய்

பாண்டவர் தேர்கடவும் நீண்டபி ரான்மருக

பாண்டிய னீறணிய

மொழிவோனே

வேங்கையும் வாரணமும் வேங்யு மானும்வளர்

வேங்கட மாமலையி

லுறைவோனே

வேண்டிய போதடியர் வேண்டிய போகமது

வேண்டவெ றாதுதவு

பெருமாளே.

பாடல் 528 ( திருவேங்கடம் )

ராகம் - ; தாளம் -

தாந்தன தானதன தாந்தன தானதன

தாந்தன தானதன

தனதான

சாந்தமில் மோகவெரி காந்திய வாவனில

மூண்டவி யாதசம

யவிரோத

சாங்கலை வாரிதியை நீந்தவொ ணாதுலகர்

தாந்துணை யாவரென

மடவார்மேல்

ஏந்திள வார்முளரி சாந்தணி மார்பினொடு

தோய்ந்துரு காவறிவு

தடுமாறி

ஏங்கிட ஆருயிரை வாங்கிய காலன்வசம்

யான்தனி போய்விடுவ

தியல்போதான்

காந்தளி னானகர மான்தரு கானமயில்

காந்தவி சாகசர

வணவேளே

காண்டகு தேவர்பதி யாண்டவ னேசுருதி

யாண்டகை யேயிபமின்

மணவாளா

வேந்தகு மாரகுக சேந்தம யூரவட

வேங்கட மாமலையி

லுறைவோனே

வேண்டிய போதடியர் வேண்டிய போகமது

வேண்டவெ றாதுதவு

பெருமாளே.

பாடல் 529 ( திருவேங்கடம் )

ராகம் - சக்ரவாஹம் ; தாளம் - திஸ்ர த்ருபுடை

தனதாந்தன தானன தானன

தனதாந்தன தானன தானன

தனதாந்தன தானன தானன

தனதான

வரிசேர்ந்திடு சேல்கய லோவெனு

முழைவார்ந்திடு வேலையு நீலமும்

வடுவாங்கிடு வாள்விழி மாதர்கள்

வலையாலே

வளர்கோங்கிள மாமுகை யாகிய

தனவாஞ்சையி லேமுக மாயையில்

வளமாந்தளிர் போல்நிற மாகிய

வடிவாலே

இருள்போன்றிடு வார்குழல் நீழலில்

மயல்சேர்ந்திடு பாயலின் மீதுற

இனிதாங்கனி வாயமு தூறல்கள்

பருகாமே

எனதாந்தன தானவை போயற

மலமாங்கடு மோகவி காரமு

மிவைநீங்கிட வேயிரு தாளினை

யருள்வாயே

கரிவாம்பரி தேர்திரள் சேனையு

முடனாந்துரி யோதன னாதிகள்

களமாண்டிட வேயொரு பாரத

மதிலேகிக்

கனபாண்டவர் தேர்தனி லேயெழு

பரிதூண்டிய சாரதி யாகிய

கதிரோங்கிய நேமிய னாமரி

ரகுராமன்

திரைநீண்டிரை வாரியும் வாலியும்

நெடிதோங்கும ராமர மேழொடு

தெசமாஞ்சிர ராவண னார்முடி

பொடியாகச்

சிலைவாங்கிய நாரண னார்மரு

மகனாங்குக னேபொழில் சூழ்தரு

திருவேங்கட மாமலை மேவிய

பெருமாளே.

பாடல் 530 ( வள்ளிமலை )

ராகம் - தர்பாரி கானடா; தாளம் - ஆதி

தய்யதன தான தய்யதன தான

தய்யதன தானத்

தனதான

அல்லிவிழி யாலு முல்லைநகை யாலு

மல்லல்பட ஆசைக்

கடலீயும்

அள்ளவினி தாகி நள்ளிரவு போலு

முள்ளவினை யாரத்

தனமாரும்

இல்லுமிளை யோரு மெல்ல அயலாக

வல்லெருமை மாயச்

சமனாரும்

எள்ளியென தாவி கொள்ளைகொளு நாளில்

உய்யவொரு நீபொற்

கழல்தாராய்

தொல்லைமறை தேடி யில்லையெனு நாதர்

சொல்லுமுப தேசக்

குருநாதா

துள்ளிவிளை யாடு புள்ளியுழை நாண

வெள்ளிவன மீதுற்

றுறைவோனே

வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ

வல்லைவடி வேலைத்

தொடுவோனே

வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு

வள்ளிமண வாளப்

பெருமாளே.

பாடல் 531 ( வள்ளிமலை )

ராகம் - மோஹனம்; தாளம் - ஆதி

தய்யதன தான தய்யதன தான

தய்யதன தானத்

தனதான

ஐயுமுறு நோயு மையலும வாவி

னைவருமு பாயப்

பலநூலின்

அள்ளல்கட வாது துள்ளியதில் மாயு

முள்ளமுமில் வாழ்வைக்

கருதாசைப்

பொய்யுமக லாத மெய்யையவள ராவி

உய்யும்வகை யோகத்

தணுகாதே

புல்லறிவு பேசி யல்லல் படு வேனை

நல்லஇரு தாளிற்

புணர்வாயே

மெய்யபொழில் நீடு தையலைமு நாலு

செய்யபுய மீதுற்

றணைவோனே

வெள்ளையிப மேறு வள்ளல்கிளை வாழ

வெள்ளமுது மாவைப்

பொருதோனே

வையமுழு தாளு மையமயில் வீர

வல்லமுரு காமுத்

தமிழ்வேளே

வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு

வள்ளிமண வாளப்

பெருமாளே.

பாடல் 532 ( வள்ளிமலை )

ராகம் - ; தாளம் -

தய்யத்த தான தந்த தய்யத்த தான தந்த

தய்யத்த தான தந்த

தனதான

கையொத்து வாழு மிந்த மெய்யொத்த வாழ்வி
கந்து

பொய்யொத்த வாழ்வு கண்டு

மயலாகிக்

கல்லுக்கு நேரும் வஞ்ச வுள்ளத்தர் மேல்வி ழுந்து

கள்ளப்ப யோத ரங்க

ளுடன்மேவி

உய்யப்ப டாமல் நின்று கையர்க்கு பாய மொன்று

பொய்யர்க்கு மேய யர்ந்து

ளுடைநாயேன்

உள்ளப்பெ றாக நின்று தொய்யப்ப டாம லென்று

முள்ளத்தின் மாய்வ தொன்றை

மொழியாயோ

ஐயப்ப டாத ஐந்து பொய்யற்ற சோலை தங்கு

தெய்வத்தெய் வானை கொங்கை

புணர்வோனே

அல்லைப்பொ றாமு ழங்கு சொல்லுக்ர சேவ லொன்று

வெல்லப்ப தாகை கொண்ட

திறல்வேலா

வையத்தை யோடி யைந்து கையற்கு வீசு தந்தை

மெய்யொத்த நீதி கண்ட

பெரியோனே

வள்ளிக்கு ழாம டர்ந்த வள்ளிக்கல் மீது சென்று

வள்ளிக்கு வேடை கொண்ட

பெருமாளே.

பாடல் 533 ( வள்ளிமலை )

ராகம் - ; தாளம் -

தய்யத்த தான தந்த தய்யத்த தான தந்த

தய்யத்த தான தந்த

தனதான

முல்லைக்கு மார னங்கை வில்லுக்கு மாதர் தங்கள்

பல்லுக்கும் வாடி யின்ப

முயலாநீள்

முள்ளூற்ற கால்ம டிந்து கொள்ளிக்குள் மூழ்கி வெந்து

பள்ளத்தில் வீழ்வ தன்றி

யொருஞான

எல்லைக்கு மார ணங்கள் சொல்லித்தொ ழாவ ணங்கு

மெல்லைக்கும் வாவி நின்ற

னருள்நாமம்

எள்ளற்கு மால யர்ந்து வுள்ளத்தி லாவ என்று

முள்ளப்பெ றாரி ணங்கை

யொழிவேனோ

அல்லைக்க வானை தந்த வல்லிக்கு மார்பி லங்க

அல்லிக்கொள் மார்ப லங்கல்

புனைவோனே

அள்ளற்ப டாத கங்கை வெள்ளத்து வாவி தங்கி

மெள்ளச்ச ரோரு கங்கள்

பயில்நாதா

வல்லைக்கு மார கந்த தில்லைப்பு ராரி மைந்த

மல்லுப்பொ ராறி ரண்டு

புயவீரா

வள்ளிக்கு ழாம டர்ந்த வள்ளிக்கல் மீது சென்று

வள்ளிக்கு வேடை கொண்ட

பெருமாளே.

பாடல் 534 ( வள்ளிமலை )

ராகம் - ; தாளம் -

தய்யத்த தாத்த தய்யத்த தாத்த

தய்யத்த தாத்த

தனதான

கள்ளக்கு வாற்பை தொள்ளைப்பு லாற்பை

துள்ளிக்க னார்க்க

யவுகோப

கள்வைத்த தோற்பை பொள்ளுற்ற காற்பை

கொள்ளைத்து ராற்பை

பசுபாச

அள்ளற்பை மாற்பை ஞெள்ளற்பை சீப்பை

வெள்ளிட்ட சாப்பி

சிதமீரல்

அள்ளச்சு வாக்கள் சள்ளிட்டி ழாப்பல்

கொள்ளப்ப டாக்கை

தவிர்வேனோ

தெள்ளத்தி சேர்ப்ப வெள்ளத்தி மாற்கும்

வெள்ளுத்தி மாற்கு

மருகோனே

சிள்ளிட்ட காட்டி லுள்ளக்கி ரார்க்கொல்

புள்ளத்த மார்க்கம்

வருவோனே

வள்ளிச்சன் மார்க்கம் விள்ளைக்கு நோக்க

வல்லைக்கு ளேற்று

மிளையோனே

வள்ளிக்கு ழாத்து வள்ளிக்கல் காத்த

வள்ளிக்கு வாய்த்த

பெருமாளே.

பாடல் 535 ( வள்ளிமலை )

ராகம் - ; தாளம் -

தய்யத்த தாத்த தய்யத்த தாத்த

தய்யத்த தாத்த

தனதான

வெல்லிக்கு வீக்கு முல்லைக்கை வீக்கு

வில்லிக்க தாக்க

ருதும்வேளால்

வில்லற் றவாக்கொள் சொல்லற்று காப்பொய்

யில்லத் துறாக்க

வலைமேவு

பல்லத்தி வாய்க்க அல்லற்ப டாக்கை

நல்லிற் பொறாச்ச

மயமாறின்

பல்லத்த மார்க்க வல்லர்க்கர் மூர்க்கர்

கல்விக் கலாத்த

லையலாமோ

அல்லைக்கொல் வார்த்தை சொல்லிக்கி தோத்து

சொல்குக்கு டார்த்த

இளையோனே

அல்லுக்கு மாற்றி னெல்லுக்க மேற்புல்

கெல்லைப்ப டாக்க

ருணைவேளே

வல்லைக்கு மேற்றர் தில்லைக்கு மேற்றர்

வல்லிக்கு மேற்ற

ரருள்வோனே

வள்ளிக்கு ழாத்து வள்ளிக்கல் காத்த

வள்ளிக்கு வாய்த்த

பெருமாளே.

பாடல் 536 ( வள்ளிமலை )

ராகம் - ஆனந்த பைரவி; தாளம் - ஆதி 2 களை (16)

தனதன தனதன தனதன தனதன

தய்யத்த தாத்த

தனதான

ககனமு மநிலமு மனல்புனல் நிலமமை

கள்ளப் புலாற்கி

ருமிவீடு

கனலெழ மொழிக்தரு சினமென மதமிகு

கள்வைத்த தோற்பை

சுமவாதே

யுகஇறு திகளனலு மிறுதியி லொருபொருள்

உள்ளக்க ணோக்கு

மறிவூறி

ஒளிதிக ழருவுரு வெனுமறை யிறுதியி

லுள்ளத்தை நோக்க

அருள்வாயே

ம்ருகமத பரிமள விகசித நளினநள்

வெள்ளைப்பி ராட்டி

இறைகாணா

விடதர குடிலச டிலமிசை வெகுமுக

வெள்ளத்தை யேற்ற

பதிவாழ்வே

வகுளமு முகுளித வழைகளு மலிபுன

வள்ளிக்கு லாத்தி

கிரிவாழும்

வனசரர் மரபினில் வருமொரு மரகத

வள்ளிக்கு வாய்த்த

பெருமாளே.

பாடல் 537 ( வள்ளிமலை )

ராகம் - ; தாளம் -

தய்யதன தந்த தய்யதன தந்த

தய்யதன தந்த

தனதான

அல்லசல டைந்த வில்லடல நங்கன்

அல்லிமல ரம்பு

தனையேவ

அள்ளியெரி சிந்த பிள்ளைமதி தென்ற

லையமது கிண்ட

அணையூடே

சொல்லுமர விந்த வல்லிதனி நின்று

தொல்லைவினை யென்று

முனியாதே

துய்யவரி வண்டு செய்யுமது வுண்டு

துள்ளியக டம்பு

தரவேணும்

கல்லசல மங்கை யெல்லையில் விரிந்த

கல்விகரை கண்ட

புலவோனே

கள்ளொழுகு கொன்றை வள்ளல்தொழ அன்று

கல்லறை வொன்றை

யருள்வோனே

வல்லசுர ரஞ்ச நல்லசுரர் விஞ்ச

வல்லமைதெ ரிந்த

மயில்வீரா

வள்ளிபடர் கின்ற வள்ளிமலை சென்று

வள்ளியை மணந்த

பெருமாளே.

பாடல் 538 ( வள்ளிமலை )

ராகம் - அமிர்தவர்ஷணி ; தாளம் - ஆதி (தேசாதி)

தனதாத்த தய்ய தனதாத்த தய்ய

தனதாத்த தய்ய

தனதான

குடிவாழ்க்கை யன்னை மனையாட்டி பிள்ளை

குயில்போற்ப்ர சன்ன

மொழியார்கள்

குலம்வாய்த்த நல்ல தனம்வாய்த்த தென்ன

குருவார்த்தை தன்னை

யுணராதே

இடநாட்கள் வெய்ய நமனீட்டி தொய்ய

இடர்கூட்ட இன்னல்

கொடுபோகி

இடுகாட்டி லென்னை எரியூட்டு முன்னு

னிருதாட்கள் தம்மை

யுணர்வேனோ

வடநாட்டில் வெள்ளி மலைகாத்து புள்ளி

மயில்மேற்றி கழ்ந்த

குமரேசா

வடிவாட்டி வள்ளி அடிபோற்றி வள்ளி

மலைகாத்த நல்ல

மணவாளா

அடிநாட்கள் செய்த பிழைநீக்கி யென்னை

யருள்போற்றும் வண்மை

தரும்வாழ்வே

அடிபோற்றி யல்லி முடிசூட்ட வல்ல

அடியார்க்கு நல்ல

பெருமாளே.

பாடல் 539 ( வள்ளிமலை )

ராகம் -; தாளம் -

தனதந்த தந்தனம் தனதந்த தந்தனம்

தனதந்த தந்தனம்

தனதான

சிரமங்க மங்கைகண் செவிவஞ்ச நெஞ்சுசெஞ்

சலமென்பு திண்பொருந்

திடுமாயம்

சிலதுன்ப மின்பமொன் றிறவந்து பின்புசெந்

தழலிண்கண் வெந்துசிந்

திடஆவி

விரைவின்க ணந்தகன் பொரவந்த தென்றுவெந்

துயர்கொண்ட லைந்துலைந்

தழியாமுன்

வினையொன்று மின்றிநன் றியலொன்றி நின்பதம்

வினவென்று அன்புதந்

தருள்வாயே

அரவின்கண் முன்துயின் றருள்கொண்ட
லண்டர்கண்

டமரஞ்ச மண்டிவந்

திடுசூரன்

அகலம் பிளந்தணைந் தகிலம் பரந்திரங்

கிடஅன் றுடன்றுகொன்

றிடும்வேலா

மரைவெங் கயம்பொருந் திடவண் டினங்குவிந்

திசையொன்ற மந்திசந்

துடனாடும்

வரையின்கண் வந்துவண் குறமங்கை பங்கயம்

வரநின்று கும்பிடும்

பெருமாளே.

பாடல் 540 ( வள்ளிமலை )

ராகம் - ; தாளம் -

தனதன தந்தன தந்த தந்தன

தனதன தந்தன தந்த தந்தன

தனதன தந்தன தந்த தந்தன

தனதான

வரைவில்பொய் மங்கையர் தங்க ளஞ்சன

விழியையு கந்துமு கந்து கொண்டடி

வருடிநி தம்பம ளைந்து தெந்தென

அளிகாடை

மயில்குயி லன்றிலெ னும்பு ளின்பல

குரல்செய்தி ருந்துபி னுந்தி யென்கிற

மடுவில்வி ழுந்துகி டந்து செந்தழல்

மெழுகாகி

உருகியு கந்திதழ் தின்று மென்றுகை

யடியின கங்கள்வ ரைந்து குங்கும

உபய தனங்கள்த தும்ப அன்புட

னணையாமஞ்

சுலவிய கொண்டைகு லைந்த லைந்தெழ

அமளியில் மின்சொல்ம ருங்கி லங்கிட

உணர்வழி யின்பம றந்து நின்றனை

நினைவேனோ

விரவி நெருங்குகு ரங்கி னங்கொடு

மொகுமொகெ னுங்கட லுங்க டந்துறு

விசைகொடி லங்கைபு குந்த ருந்தவர்

களிகூர

வெயில்நில வும்பரு மிம்ப ரும்படி
ஜெயஜெய வென்றுவி டுங்கொ டுங்கணை
விறல்நிரு தன்தலை சிந்தி னன்திரு
மருகோனே
அருகர் கணங்கள்பி ணங்கி டும்படி
மதுரையில் வெண்பொடி யும்ம ரந்திட
அரகர சங்கர வென்று வென்றருள்
புகழ்வேலா
அறம்வளர் சுந்தரி மைந்த தண்டலை
வயல்கள் பொருந்திய சந்த வண்கரை
யரிவை விலங்கலில் வந்து கந்தருள்
பெருமாளே.

பாடல் 541 ( திருக்கழுக்குன்றம் )
ராகம் - ; தாளம் -
தனத்த தத்தம் தத்தன தானன
தனத்த தத்தம் தத்தன தானன
தனத்த தத்தம் தத்தன தானன
தனதான
அகத்தி னைக்கொண் டிப்புவி மேல்சில
தினத்து மற்றொன் றுற்றறி யாதுபின்

அவத்துள் வைக்குஞ் சித்தச னாரடு
கணையாலே
அசுத்த மைக்கண் கொட்புறு பாவையர்
நகைத்து ரைக்கும் பொய்க்கடல் மூழ்கியெ
அலக்க ணிற்சென் றுத்தடு மாறியெ
சிலநாள்போய்
இகத்தை மெய்க்கொண் டிப்புவி பாலர்பொன்
மயக்கி லுற்றம் பற்றைவி டாதுட
லிளைப்பி ரைப்பும் பித்தமு மாய்நரை
முதிர்வாயே
எமக்க யிற்றின் சிக்கினி லாமுனுன்
மலர்ப்ப தத்தின் பத்திவி டாமன
திருக்கு நற்றொண் டர்க்கிணை யாகவு
னருள்தாராய்
புகழ்ச்சி லைக்கந் தர்ப்பனு மேபொடி
படச்சி ரித்தண் முப்புர நீறுசெய்
புகைக்க னற்கண் பெற்றவர் காதலி
யருள்பாலா
புவிக்குள் யுத்தம் புத்திரர் சேயர
சனைத்து முற்றுஞ் செற்றிட வேபகை
புகட்டி வைக்குஞ் சக்கிர பாணிதன்

மருகோனே

திகழ்க்க டப்பம் புட்பம தார்புய

மறைத்து ருக்கொண் டற்புத மாகிய

தினைப்பு னத்தின் புற்றுறை பாவையை

யணைசீலா

செகத்தி லுச்சம் பெற்றம ராவதி

யதற்கு மொப்பென் றுற்றழ கேசெறி

திருக்க ழுக்குன் றத்தினில் மேவிய

பெருமாளே.

பாடல் 542 ( திருக்கழுக்குன்றம் )

ராகம் - ஹிந்தோளம்; தாளம் - ஆதி-தேசாதி (8)

தனதனன தான தனதனன தான

தனதனன தான

தனதான

எழுகுநிறை நாபி அரிபிரமர் சோதி

யிலகுமரன் மூவர்

முதலானோர்

இறைவியெனு மாதி பரைமுலையி ஞு�றி

யெழுமமிர்த நாறு

கனிவாயா

புழுகொழுகு காழி கவுணியரில் ஞான

புநிதனென ஏடு

தமிழாலே

புனலிலெதி ரேற சமணர்கழு வேற

பொருதகவி வீர

குருநாதா

மழுவுழைக பால டமரகத்ரி சூல

மணிகரவி நோத

ரருள்பாலா

மலரயனை நீடு சிறைசெய்தவன் வேலை

வளமைபெற வேசெய்

முருகோனே

கழுகுதொழு வேத கிரிசிகரி வீறு

கதிருலவு வாசல்

நிறைவானோர்

கடலொலிய தான மறைதமிழ்க ளோது

கதலிவன மேவு

பெருமாளே.

பாடல் 543 ( திருக்கழுக்குன்றம் )

ராகம் - ; தாளம் -

தான தத்த தனந்த தனா தனாதன

தான தத்த தனந்த தனா தனாதன

தான தத்த தனந்த தனா தனாதன

தனனதான

ஓல மிட்ட சுரும்பு தனா தனாவென

வேசி ரத்தில் விழுங்கை பளீர் பளீரென

வோசை பெற்ற சிலம்பு கலீர் கலீரென

விரகலீலை

ஓர்மி டற்றி லெழும்புள் குகூ குகூவென

வேர்வை மெத்த வெழுந்து சலா சலாவென

ரோம குச்சு நிறைந்து சிலீர் சிலீரென

அமுதமாரன்

ஆல யத்து ளிருந்து குபீர் குபீரென

வேகு திக்க வுடம்பு வி�ணர் வி�ணரென

ஆர முத்த மணிந்து அளா வளாவென

மருவுமாதர்

ஆசை யிற்கை கலந்து சுமா சுமாபவ

சாக ரத்தி லழுந்தி எழா எழாதுளம்

ஆறெ ழுத்தை நினைந்து குகா குகாவென

வகைவராதோ

மாலை யிட்ட சிரங்கள் செவேல் செவேலென

மேலெ ழுச்சி தரும்பல் வெளேல் வெளேலென
வாகை பெற்ற புயங்கள் கறேல் கறேலென
எதிர்கொள்சூரன்
மார்பு மொக்க நெரிந்து காணல் காணலென
பேய்கு திக்க நிணங்கள்ழு ழுவென
வாய்பு தைத்து விழுந்து ஐயோ ஐயோவென
உதிரமாறாய்
வேலை வற்றி வறண்டு சுறீல் சுறீலென
மாலை வெற்பு மிடிந்து திடீல் திடீலென
மேன்மை பெற்ற ஜனங்கள் ஐயா ஐயாவென
விசைகள்கூற
வேலெ டுத்து நடந்த திவா கராசல
வேடு வப்பெண் மணந்த புயா சலாதமிழ்
வேத வெற்பி லமர்ந்த க்ருபா கராசிவ
குமரவேளே.

பாடல் 544 ( திருக்கழுக்குன்றம் )

ராகம் - பீம்பளாஸ்; தாளம் - ஆதி - திஸ்ர நடை (12)

தான தத்த தான தத்த தான தத்த
தனதான

வேத வெற்பி லேபு னத்தில் மேவி நிற்கு

மபிராம

வேடு வச்சி பாத பத்ம மீது செச்சை

முடிதோய

ஆத ரித்து வேளை புக்க ஆறி ரட்டி

புயநேய

ஆத ரத்தோ டாத ரிக்க ஆன புத்தி

புகல்வாயே

காது முக்ர வீர பத்ர காளி வெட்க

மகுடாமா

காச முட்ட வீசி விட்ட காலர் பத்தி

யிமையோரை

ஓது வித்த நாதர் கற்க வோது வித்த

முநிநாண

ஒரெ முத்தி லாறெ ழுத்தை யோது வித்த

பெருமாளே.

பாடல் 545 ( பேறைநகர் )

ராகம் - ; தாளம் -

தானதன தான தந்த தானதன தான தந்த

தானதன தான தந்த

தனதான

நீலமயில் சேரு மந்தி மாலை நிக ராகி யந்த

காரமிக வேறி றைந்த

குழலாலும்

நீடுமதி ரேக இன்ப மாகியச லாப சந்த்ர

னேர்தருமு கார விந்த

மதனாலும்

ஆலினிக ரான வுந்தி யாலுமட வார்கள் தங்கள்

ஆசைவலை வீசு கெண்டை

விழியாலும்

ஆடியக டாமி சைந்த வார்முலைக ளாலு மந்த

னாகிமயல் நானு ழன்று

திரிவேனோ

கோலவுரு வாயெ ழுந்து பாரதனை யேயி டந்து

கூவிடு முராரி விண்டு

திருமார்பன்

கூடமுறை நீடு செம்பொன் மாமதலை யூடெ ழுந்த

கோபவரி நார சிங்கன்

மருகோனே

பீலிமயில் மீது றைந்து சூரர்தமை யேசெ யங்கொள்

பேர்பெரிய வேல்கொள் செங்கை

முருகோனே

பேடைமட ஓதி மங்கள் கூடிவிளை யாடு கின்ற

பேறைநகர் வாழ வந்த

பெருமாளே.

பாடல் 546 ( மயிலம் )

ராகம் - ; தாளம் -

தனதந்த தானன தானா தானா

தனதந்த தானன தானா தானா

தனதந்த தானன தானா தானா

தனதான

கொலைகொண்ட போர்விழி கோலோ வாளோ

விடமிஞ்சு பாதக வேலோ சேலோ

குழைகொண்டு லாவிய மீனோ மானோ

எனுமானார்

குயில்தங்கு மாமொழி யாலே நேரே

யிழைதங்கு நூலிடை யாலே மீதூர்

குளிர்கொங்கை மேருவி னாலே நானா

விதமாகி

உலைகொண்ட மாமெழு காயே மோகா

யலையம்பு ராசியி னு�டே மூழ்கா

வுடல்பஞ்ச பாதக மாயா நோயா

லழிவேனோ

உறுதண்ட பாசமொ டாரா வாரா

எனையண்டி யேநம னார்தூ தானோர்

உயிர்கொண்டு போய்விடு நாள்நீ மீதா

ளருள்வாயே

அலைகொண்ட வாரிதி கோகோ கோகோ

எனநின்று வாய்விட வேநீள் மாசூ

ரணியஞ்ச ராசனம் வேறாய் நீறா

யிடவேதான்

அவிர்கின்ற சோதிய வாரார் நீள்சீ

ரனலங்கை வேல்விடும் வீரா தீரா

அருமந்த ரூபக ஏகா வேறோர்

வடிவாகி

மலைகொண்ட வேடுவர் கானு� டேபோய்

குறமங்கை யாளுட னேமா லாயே

மயல்கொண்டு லாயவள் தாள்மீ தேவீழ்

குமரேசா

மதிமிஞ்சு போதக வேலா ஆளா

மகிழ்சம்பு வேதொழு பாதா நாதா

மயிலந்தண் மாமலை வாழ்வே வானோர்

பெருமாளே.

பாடல் 547 ( திருசிராப்பள்ளி )

ராகம் - ; தாளம் -

தந்த தாத்தன தத்தத் தானன

தந்த தாத்தன தத்தத் தானன

தந்த தாத்தன தத்தத் தானன

தனதான

அங்கை நீட்டிய ழைத்துப் பாரிய

கொங்கை காட்டிம றைத்துச் சீரிய

அன்பு போற்பொய்ந டித்துக் காசள

வுறவாடி

அம்பு தோற்றக ணிட்டுத் தோதக

இன்ப சாஸ்த்ரமு ரைத்துக் கோகிலம்

அன்றில் போற்குர லிட்டுக் கூரிய

நகரேகை

பங்க மாக்கிய லைத்துத் தாடனை

கொண்டு வேட்கையெ ழுப்பிக் காமுகர்

பண்பில் வாய்க்கம யக்கிக் கூடுத

லியல்பாகப்

பண்டி ராப்பகல் கற்றுச் சூளைகள்

தங்கள் மேற்ப்ரமை விட்டுப் பார்வதி

பங்கர் போற்றிய பத்மத் தாள்தொழ

அருள்வாயே

எங்கு மாய்க்குறை வற்றுச் சேதன

அங் மாய்ப்பரி சுத்தத் தோர்பெறும்

இன்ப மாய்ப்புகழ் முப்பத் தாறினின்

முடிவேறாய்

இந்த்ர கோட்டிம யக்கத் தான்மிக

மந்த்ர மூர்த்தமெ டுத்துத் தாமத

மின்றி வாழ்த்திய சொர்க்கக் காவல

வயலூ�ரா

செங்கை வேற்கொடு துட்டச் சூரனை

வென்று தோற்பறை கொட்டக் கூளிகள்

தின்று கூத்துந டிக்கத் தோகையில்

வரும்வீரா

செம்பொ னாற்றிகழ் சித்ரக் கோபுர

மஞ்சி ராப்பகல் மெத்தச் சூழ்தரு

தென்சி ராப்பள்ளி வெற்பிற் றேவர்கள்

பெருமாளே.

பாடல் 548 ( திருசிராப்பள்ளி )

ராகம் - கல்யாணி ; தாளம் - திஸ்ர த்ருபுடை (7)

தந்தாதன தானன தாத்தன

தந்தாதன தானன தாத்தன

தந்தாதன தானன தாத்தன

தனதான

அந்தோமன மேநம தாக்கையை

நம்பாதெயி தாகித சூத்திர

மம்போருக னாடிய பூட்டிது

இனிமேல்நாம்

அஞ்சாதமை யாகிரி யாக்கையை

பஞ்சாடிய வேலவ னார்க்கிய

லங்காகுவம் வாஇனி தாக்கையை

ஒழியாமல்

வந்தோமிது வேகதி யாட்சியு

மிந்தாமயில் வாகனர் சீட்டிது

வந்தாளுவம் நாமென வீக்கிய

சிவநீறும்

வந்தேவெகு வாநமை யாட்கொளு

வந்தார்மத மேதினி மேற்கொள

மைந்தாகும ராவெனு மார்ப்புய

மறவாதே

திந்தோதிமி தீதத மாத்துடி

தந்தாதன னாதன தாத்தன

செம்பூரிகை பேரிகை யார்த்தெழ

மறையோதச்

செங்காடென வேவரு மூர்க்கரை

சங்காரசி காமணி வேற்கொடு

செண்டாடிம காமயில் மேற்கொளு

முருகோனே

இந்தோடிதழ் நாகம காக்கடல்

கங்காளமி னார்சடை சூட்டிய

என்தாதைச தாசிவ கோத்திர

னருள்பாலா

எண்கூடரு ளால்நெளவி நோக்கியை

நன்பூமண மேவிசி ராப்பளி

யென்பார்மன மேதினி நோக்கிய

பெருமாளே.

பாடல் 549 ( திருசிராப்பள்ளி )

ராகம் - ; தாளம் -

தனதன தந்தன தாத்தன

தனதன தந்தன தாத்தன

தனதன தந்தன தாத்தன

தனதான

அரிவையர் நெஞ்சுரு காப்புணர்

தருவிர கங்களி னாற்பெரி

தவசம்வி ளைந்துவி டாய்த்தடர்

முலைமேல்வீழ்ந்

தகிலொடு சந்தன சேற்றினில்

முழுகியெ ழுந்தெதிர் கூப்புகை

யடியின கம்பிறை போற்பட

விளையாடிப்

பரிமளம் விஞ்சிய பூக்குழல்

சரியம ருங்குடை போய்ச்சில

பறவைக ளின்குர லாய்க்கயல்

விழிசோரப்

பனிமுக முங்குறு வேர்ப்பெழ

இதழமு துண்டிர வாய்ப்பகல்

பகடியி டும்படி தூர்த்தனை

விடலாமோ

சரியையு டன்க்ரியை போற்றிய

பரமப தம்பெறு வார்க்கருள்

தருகணன் ரங்கபு ரோச்சிதன்

மருகோனே

சயிலமெ றிந்தகை வேற்கொடு

மயிலினில் வந்தெனை யாட்கொளல்

சகமறி யும்படி காட்டிய

குருநாதா

திரிபுவ னந்தொழு பார்த்திபன்

மருவிய மண்டப கோட்டிகள்

தெருவில்வி ளங்குசி ராப்பளி

மலைமீதே

தெரியஇ ருந்தப ராக்ரம

உருவளர் குன்றுடை யார்க்கொரு

திலதமெ னும்படி தோற்றிய

பெருமாளே.

பாடல் 550 ( திருசிராப்பள்ளி )

ராகம் -; தாளம் -

தனதன தானான தானன தனதன தானான தானன

தனதன தானான தானன

தந்ததான

அழுதழு தாசார நேசமு முடையவர் போலேபொய் சூழ்வுறும்

அசடிகள் மாலான காமுகர்

குறைவி லிமையவர்

பெருமாளே.

பாடல் 614 ( தென்சேரிகிரி )

ராகம் - ; தாளம் -

தந்தான தனதனன தந்தான தனதனன

தந்தான தனதனன

தனதான

எங்கேனு மொருவர்வர அங்கேக ணினிதுகொடு

இங்கேவ ருனதுமயல்

தரியாரென்

றிந்தாவெ னினியஇதழ் தந்தேனை யுறமருவ

என்றாசை குழையவிழி

யிணையாடித்

தங்காம லவருடைய வுண்டான பொருளுயிர்கள்

சந்தேக மறவெபறி

கொளுமானார்

சங்கீத கலவிநல மென்றோது முததிவிட

தண்பாரு முனதருளை

யருள்வாயே

சங்கோடு திகிரியது கொண்டேயு நிரைபிறகு

சந்தாரும் வெதிருகுழ

லதுவூதித்

தன்காதல் தனையுகள என்றேழு மடவியர்கள்

தங்கூறை கொடுமரமி

லதுவேறுஞ்

சிங்கார அரிமருக பங்கேரு கனுமருள

சென்றேயும் அமரருடை

சிறைமீளச்

செண்டாடி அசுரர்களை ஒன்றாக அடியர்தொழு

தென்சேரி கிரியில்வரு

பெருமாளே.

பாடல் 615 ( தென்சேரிகிரி )

ராகம் - ; தாளம் -

தந்தானத் தந்த தனதன

தந்தானத் தந்த தனதன

தந்தானத் தந்த தனதன

தனதான

கொண்டாடிக் கொஞ்சு மொழிகோடு

கண்டாரைச் சிந்து விழிகொடு

கொந்தாரச் சென்ற குழல்கொடு

வடமேருக்

குன்றோடொப் பென்ற முலைகொடு

நின்றோலக் கஞ்செய் நிலைகொடு

கொம்பாயெய்ப் புண்ட விடைகொடு

பலரோடும்

பண்டாடச் சிங்கி யிடுமவர்

விண்டாலிக் கின்ற மயிலன

பண்பாலிட் டஞ்செல் மருளது

விடுமாறு

பண்டேசொற் றந்த பழமறை

கொண்டேதர்க் கங்க ளறவுமை

பங்காளர்க் கன்று பகர்பொருள்

அருள்வாயே

வண்டாடத் தென்றல் தடமிசை

தண்டாதப் புண்ட ரிகமலர்

மங்காமற் சென்று மதுவைசெய்

வயலு□ரா

வன்காளக் கொண்டல் வடிவொரு

சங்க்ராமக் கஞ்சன் விழவுதை

மன்றாடிக் கன்பு தருதிரு

மருகோனே

திண்டாடச் சிந்து நிசிசரர்

தொண்டாடக் கண்ட வமர்பொரு

செஞ்சேவற் செங்கை யுடையசண்

முகதேவே

சிங்காரச் செம்பொன் மதிளத

லங்காரச் சந்த்ர கலைதவழ்

தென்சேரிக் குன்றி லினிதுறை

பெருமாளே.

பாடல் 616 ( கொங்கணகிரி )

ராகம் - மனோலயம்; தாளம் - ஆதி - கண்டநடை (2)

தந்ததன தத்ததன தந்ததன தத்ததன

தந்ததன தத்ததன

தனதான

ஐங்கரனை யொத்தமன மைம்புலம கற்றிவள

ரந்திபக லற்றநினை

வருள்வாயே

அம்புவித னக்குள்வளர் செந்தமிழ்வ ழுத்தியுனை

அன்பொடுது திக்கமன

மருள்வாயே

தங்கியத வத்துணர்வு தந்தடிமை முத்திபெற

சந்திரவெ ளிக்குவழி

யருள்வாயே

தண்டிகைக னப்பவுசு எண்டிசைம திக்கவளர்

சம்ப்ரமவி தத்துடனே

யருள்வாயே

மங்கையர்சு கத்தைவெகு இங்கிதமெ னுற்றமன

முன்றனைநி னைத்தமைய

அருள்வாயே

மண்டலிக ரப்பகலும் வந்தசுப ரட்சைபுரி

வந்தணைய புத்தியினை

யருள்வாயே

கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி
லப்பரருள்

கொண்டுஉட லுற்றபொரு

ளருள்வாயே

குஞ்சரமு கற்கிளைய கந்தனென வெற்றிபெறு

கொங்கணகி ரிக்குள்வளர்

பெருமாளே.

பாடல் 617 ( தீர்த்தமலை )

ராகம் - சங்கரானந்தப்ரியா; தாளம் - மிஸ்ரசாபு (3 1/2)

தகிட-1 1/2, தகதிமி-2

தாத்த தனதன தாத்த தனதன

தாத்த தனதன தாத்த தனதன

தாத்த தனதன தாத்த தனதன

தனதான

பாட்டி லுருகிலை கேட்டு முருகிலை

கூற்று வருவழி பார்த்து முருகிலை

பாட்டை யநுதின மேற்று மறிகிலை

தினமானம்

யாப்ப ணியனருள் வீட்டை விழைகிலை

நாக்கி னுனிகொடு ஏத்த அறிகிலை

பாழ்த்த பிறவியி லேற்ற மனதுநல்

வழிபோக

மாட்ட மெனுகிறை கூட்டை விடுகிலை

யேட்டின் விதிவழி யோட்ட மறிகிலை

பார்த்து மினியொரு வார்த்தை அறைகுவ

னிதுகேளாய்

வாக்கு முனதுள நோக்கு மருளுவ

னேத்த புகழடி யார்க்கு மெளியனை

வாழ்த்த இருவினை நீக்கு முருகனை
மருவாயோ
ஆட்டி வடவரை வாட்டி யரவொடு
பூட்டி திரிபுர மூட்டி மறலியி
னாட்ட மறசர ணீட்டி மதனுடல்
திருநீறாய்
ஆக்கி மகமதை வீட்டி யொருவனை
யாட்டின் முகமதை நாட்டி மறைமக
ளார்க்கும் வடுவுற வாட்டு முமையவ
னருள்பாலா
சீட்டை யெழுதிவை யாற்றி லெதிருற
ஓட்டி யழல்பசை காட்டி சமணரை
சீற்ற மொடுகழு வேற்ற அருளிய
குருநாதா
தீர்த்த எனதக மேட்டை யுடனினை
ஏத்த அருளுட னோக்கி அருளுதி
தீர்த்த மலைநகர் காத்த சசிமகள்
பெருமாளே.

பாடல் 618 ( கநகமலை )

ராகம் - ஸாவேரி ; தாளம் - அங்கதாளம் (6)

**தகதகிட-2 1/2, தகிட-1 1/2, தகதிமி-2**

**தனதனன தனன தந்தத்**

**தனதனன தனன தந்தத்**

**தனதனன தனன தந்தத்**

**தனதான**

**அரிவையர்கள் தொடரு மின்பத்**

**துலகுநெறி மிகம ருண்டிட்**

**டசடனென மனது நொந்திட்**

**டயராமல்**

**அநுதினமு முவகை மிஞ்சிச்**

**சுகநெறியை விழைவு கொண்டிட்**

**டவநெறியின் விழையு மொன்றைத்**

**தவிர்வேனோ**

**பரிதிமதி நிறைய நின்றஃ**

**தெனவொளிரு முனது துங்கப்**

**படிவமுக மவைகள் கண்டுற்**

**றகமேவும்**

**படர்கள்முழு வதும கன்றுட்**

**பரிவினொடு துதிபு கன்றெற்**

**பதயுகள மிசைவ ணங்கற்**

**கருள்வாயே**

செருவிலகு மசுரர் மங்கக்

குலகிரிகள் நடுந டுங்கச்

சிலுசிலென வலைகு லுங்கத்

திடமான

செயமுதவு மலர்பொ ருங்கைத்

தலமிலகு மயில்கொ ளுஞ்சத்

தியைவிடுதல் புரியு முன்பிற்

குழகோனே

கருணைபொழி கிருபை முந்தப்

பரிவினொடு கவுரி கொஞ்சக்

கலகலென வருக டம்பத்

திருமார்பா

கரிமுகவர் தமைய னென்றுற்

றிடுமிளைய குமர பண்பிற்

கநககிரி யிலகு கந்தப்

பெருமாளே.

பாடல் 619 ( புகழிமலை )

ராகம் - ; தாளம் -

தனனதன தான தனனதன தான

தனனதன தான

தனதான

மருவுமலர் வாச முறுகுழலி னாலும்

வரிவிழியி னாலு

மதியாலும்

மலையினிக ரான இளமுலைக ளாலு

மயல்கள்தரு மாதர்

வகையாலும்

கருதுபொரு ளாலு மனைவிமக வான

கடலலையில் மூழ்கி

அலைவேனோ

கமலபத வாழ்வு தரமயிலின் மீது

கருணையுட னேமுன்

வரவேணும்

அருமறைக ளோது பிரமன்முதல் மாலும்

அமரர்முநி ராசர்

தொழுவோனே

அகிலதல மோது நதிமருவு சோலை

அழகுபெறு போக

வளநாடா

பொருதவரு சூரர் கிரியுருவ வாரி

புனல்சுவற வேலை

யெறிவோனே

புகலரிய தான தமிழ்முநிவ ரோது

புகழிமலை மேவு

பெருமாளே.

பாடல் 620 ( பூம்பறை )

ராகம் - ; தாளம் -

தாந்ததன தான தாந்ததன தான

தாந்ததன தான

தனதான

மாந்தளிர்கள் போல வேய்ந்தவுடல் மாதர்

வாந்தவிய மாக

முறைபேசி

வாஞ்சைபெரு மோக சாந்திதர நாடி

வாழ்ந்தமனை தேடி

உறவாடி

ஏந்துமுலை மீது சாந்துபல பூசி

ஏங்குமிடை வாட

விளையாடி

ஈங்கிசைகள் மேவ லாஞ்சனையி லாமல்

ஏய்ந்தவிலை மாதர்

உறவாமோ

பாந்தண்முடி மீது தாந்ததிமி தோதி

தாஞ்செகண சேசெ

எனவோசை

பாங்குபெறு தாள மேங்கநட மாடு

பாண்டவர்ச காயன்

மருகோனே

பூந்தளிர்கள் வீறு வேங்கைகள்ப லாசு

பூங்கதலி கோடி

திகழ்சோலை

பூந்தடமு லாவு கோம்பைகள்கு லாவு

பூம்பறையின் மேவு

பெருமாளே.

பாடல் 621 ( கொடுங்குன்றம் )

ராகம் - ; தாளம் -

தனந்த தந்தம் தந்தம் தந்தந்

தந்ததான

அனங்க னம்பொன் றஞ்சுந் தங்குங்

கண்களாலே

அடர்ந்தெ ழும்பொன் குன்றங் கும்பங்

கொங்கையாலே

முனிந்து மன்றங் கண்டுந் தண்டும்

பெண்களாலே

முடங்கு மென்றன் தொண்டுங் கண்டின்

றின்புறாதோ

தெனந்தெ னந்தெந் தெந்தெந் தெந்தெந்

தெந்தெனானா

செறிந்த டர்ந்துஞ் சென்றும் பண்பின்

தும்பிபாடக்

குனிந்தி லங்குங் கொம்புங் கொந்துந்

துன்றுசோலை

கொழுங்கொ டுந்திண் குன்றந் தங்குந்

தம்பிரானே.

பாடல் 622 ( கொடுங்குன்றம் )

ராகம் - ; தாளம் -

தனதனன தனதனன தத்தத்த தந்ததன

தத்தத்த தந்ததன

--------- 3 முறை ----------

தந்ததான

எதிர்பொருது கவிகடின கச்சுக்க ளும்பொருது

குத்தித் திறந்துமலை

யிவைகளென வதிம்ருகம தப்பட்டு நின்றொழுகி

முத்துச் செறிந்தவட

மெனுநிகள மவையறவு தைத்திட்ட ணைந்துகிரி

னிற்கொத்து மங்குசநெ

ருங்குபாகர்

எதிர்பரவ உரமிசைது கைத்துக்கி டந்துடல்ப

தைக்கக்க டிந்துமிக

இரதிபதி மணிமவுலி யெற்றித்ரி யம்பகனு

முட்கத்தி ரண்டிளகி

யிளைஞருயிர் கவளமென மட்டித்த சைந்தெதிர்பு

டைத்துச்சி னந்துபொரு

கொங்கையானை

பொதுவில்விலை யிடுமகளிர் பத்மக்க ரந்தழுவி

யொக்கத்து வண்டமளி

புகஇணைய வரிபரவு நச்சுக்க ருங்கயல்கள்

செக்கச்சி வந்தமுது

பொதியுமொழி பதறஅள கக்கற்றை யுங்குலைய

முத்தத்து டன்கருணை

தந்துமேல்வீழ்

புதுமைதரு கலவிவலை யிற்பட்ட முந்தியுயிர்

தட்டுப்ப டுந்திமிர

புணரியுத தியில்மறுகி மட்டற்ற இந்திரிய

சட்டைக்கு ரம்பையழி

பொழுதினிலும் அருள்முருக சுத்தக்கொ டுங்கிரியி

னிர்த்தச் சரண்களைம

றந்திடேனே

திதிதிதி திதிதிதி தித்தித்தி திந்திதி

தத்தத்த தந்ததத

தெததெத தெததெத தெத்தெத்த தெந்தெத

திக்கட்டி கண்டிகட

ஜெகணகெண கெணஜெகுத தெத்தித்ரி யந்திரித

தக்கத்த குந்தகுர்த

திந்திதீதோ

திகுடதிகு தொகுடதொகு திக்கட்டி கண்டிகட

டக்கட்ட கண்டகட

டிடிடுடுடு டிடிடுடுடு டிக்கட்டி கண்டிகட

டுட்டுட்டு டுண்டுடுடு

திகுகுதிகு திகுகுகுகு திக்குத்தி குந்திகுகு

குக்குக்கு குங்குகுகு

என்றுதாளம்

முதிர்திமிலை கரடிகையி டக்கைக்கொ டுந்துடியு

டுக்கைப்பெ ரும்பதலை

முழவுபல மொகுமொகென வொத்திக்கொ
டும்பிரம

கத்திக்க ளும்பரவ

முகடுபுகு வெகுகொடிகள் பக்கத்தெ ழுந்தலைய

மிக்கக்க வந்தநிரை

தங்கியாட

முதுகழுகு கொடிகருட னொக்கத்தி ரண்டுவர

வுக்ரப்பெ ருங்குருதி

முழுகியெழு பயிரவர்ந டித்திட்ட கண்டமும்வே

டிக்கத்து ணிந்ததிர

முடுகிவரு நிசிசரரை முட்டிச்சி ரந்திருகி

வெட்டிக்க ளம்பொருத

தம்பிரானே.

பாடல் 623 ( குன்றக்குடி )

ராகம் - ; தாளம் -

தனன தந்த தந்த தனன தந்த தந்த

தனன தந்த தந்த

தனதான

அழகெ றிந்த சந்த்ர முகவ டங்க லந்த

அமுத புஞ்ச இன்சொல்

மொழியாலே

அடிது வண்ட தண்டை கலிலெ னுஞ்சி லம்பொ

டணிச தங்கை கொஞ்சு

நடையாலே

சுழியெ றிந்து நெஞ்சு சுழல நஞ்ச ணைந்து

தொடுமி ரண்டு கண்க

ளதனாலே

துணைநெ ருங்கு கொங்கை மருவு கின்ற பெண்கள்

துயரை யென்றொ ழிந்து

விடுவேனோ

எழுது கும்ப கன்பி னிளைய தம்பி நம்பி

யெதிர டைந்தி றைஞ்சல்

புரிபோதே

இதம கிழ்ந்தி லங்கை யசுர ரந்த தங்க

மொழிய வென்ற கொண்டல்

மருகோனே

மழுவு கந்த செங்கை அரனு கந்தி றைஞ்ச

மநுவி யம்பி நின்ற

குருநாதா

வளமி குந்த குன்ற நகர்பு ரந்து துங்க

மலைவி ளங்க வந்த

பெருமாளே.

பாடல் 624 ( குன்றக்குடி )

ராகம் - ; தாளம் -

தனதனன தனதனன தனதனன தனதனன

தந்தத்த தத்ததன தந்தத்த தத்ததன

--------- 3 முறை -------------

தனதானா

ககுபநிலை குலையவிகல் மிகுபகடின் வலியுடைய

தந்தத்தி னைத்தடிவ தொந்தத் திரத்தையுள

அகிலமறை புகழ்பரமர் ஞெகிழிகல கலகலெனும்

அம்பொற்ப தத்தர்தநு வம்பொற்பொ ருப்படர்வ

களபபரி மளமெழுகும் எழிலில்முழு குவமுளரி

யஞ்சப் புடைத்தெழுவ வஞ்சக் கருத்துமத

னபிஷேகங்

கடிவபடு கொலையிடுவ கொடியமுக படமணிவ

இன்பச் சுடர்க்கனக கும்பத் தரச்செருவ

பிருதில்புள கிதசுகமு மிருதுளமும் வளரிளைஞர்

புந்திக் கிடர்த்தருவ பந்தித் தகச்சடர்வ

கயல்மகர நிகரமிக வியன்மருவு நதியில்முதிர்

சங்கிப்பி முத்தணிவ பொங்கிக் கனத்தொளிர்வ

முலைமாதர்

வகுளமலர் குவளையிதழ் தருமணமு மிருகமத

மொன்றிக்க றுத்துமுகில் வென்றிட்டு
நெய்த்தகுழல்

அசையருசி யமுர்தக்ருத வசியமொழி
மயில்குயிலெ

னும்புட் குரற்பகர வம்புற்ற மற்புரிய

வருமறலி யரணமொடு முடுகுசமர் விழியிணைகள்

கன்றிச் சிவக்கமகிழ் நன்றிச் சமத்துநக

நுதிரேகை

வகைவகைமெ யுறவளைகள் கழலவிடை
துவளவிதழ்

உண்டுட்ப்ர மிக்கநசை கொண்டுற் றணைத்தவதி

செறிகலவி வலையிலென தறிவுடைய கலைபடுதல்

உந்திப் பிறப்பறநி னைந்திட்ட முற்றுனடி

வயலிநகர் முருகசெரு முயல்பனிரு கரகுமர

துன்றட்ட சிட்டகுண குன்றக் குடிக்கதிப

அருளாதோ

தகுகுதகு தகுதககு திகுகுதிகு திகுதிகுகு

தங்குத் தகுத்தககு திங்குத் திகுத்திகிகு

சகணசக சகசகண செகணசெக செகசெகெண

சங்கச் சகச்சகண செங்கச்செ கச்செகண

தனனதன தனதனன தெனனதென தெனதெனன

தந்தத்த னத்தனன தெந்தத்தெ னத்தெனன

தனனானா

தகுததகு தகுதகுதி திகுதிதிகு திகுதிகுதி

தங்குத் தகுத்தகுகு திங்குத் திகுத்திகுகு

டணணடண டணடணண டிணிணிடிணி
டிணிடிணிணி

டண்டட்ட டட்டடண டிண்டிட்டி டிட்டிடிணி

தரரதர தரதரர திரிரிதிரி திரிதிரிரி

தன்றத் தரத்தரர தின்றித் திரித்திரிரி

யெனதாளந்

தொகுதிவெகு முரசுகர டிகைடமரு முழவுதவில்

தம்பட்ட மத்தளமி னம்பட் டடக்கைபறை

பதலைபல திமிலைமுத லதிரவுதிர் பெரியதலை

மண்டைத் திரட்பருகு சண்டைத் திரட்கழுகு

துடர்நிபிட கருடனடர் தரகரட மொகுமொகென

வந்துற் றிடக்குடர்நி ணந்துற் றிசைத்ததிர

முதுபேய்கள்

சுனகனரி நெறுநெறென வினிதினிது
தினவினைசெய்

வெங்குக் குடத்தகொடி துங்குக் குகுக்குகென

வடனமிடு திசைபரவி நடனமிட வடலிரவி

திங்கட்ப்ர பைக்கதிர்கள் மங்கப்ர சித்தகுல

துரககஜ ரதகடக முரணரண நிருதர்விறல்

மிண்டைக் குலைத்தமர்செய் தண்டர்க்
குரத்தையருள்

பெருமாளே.

பாடல் 625 ( குன்றக்குடி )

ராகம் - ; தாளம் -

தனதனன தந்த தானன தனதனன தந்த தானன

தனதனன தந்த தானன

தனதான

கடினதட கும்ப நேரென வளருமிரு கொங்கை
மேல்விழு

கலவிதரு கின்ற மாதரொ

டுறவாடிக்

கனவளக பந்தி யாகிய நிழல்தனிலி ருந்து
தேனுமிழ்

கனியிதழை மென்று தாடனை

செயலாலே

துடியிடைநு டங்க வாள்விழி குழைபொரநி ரம்ப மூடிய

துகில்நெகிழ வண்டு கோகில

மயில்காடை

தொனியெழவி ழைந்து கூரிய கொடுநகமி சைந்து தோள்மிசை

துயிலவச இன்ப மேவுத

லொழிவேனோ

இடிமுரச றைந்து பூசல்செய் அசுரர்கள்மு றிந்து தூளெழ

எழுகடல்ப யந்து கோவென

அதிகோப

எமபடரு மென்செய் வோமென நடுநடுந டுங்க வேல்விடு

இரணமுக சண்ட மாருத

மயிலோனே

வடிவுடைய அம்பி காபதி கணபதிசி றந்து வாழ்தட

வயலிநகர் குன்ற மாநக

ருறைவோனே

வகைவகைபு கழ்ந்து வாசவன் அரிபிரமர் சந்த்ர சூரியர்

வழிபடுதல் கண்டு வாழ்வருள்

பெருமாளே.

பாடல் 626 ( குன்றக்குடி )

ராகம் - ; தாளம் -

தானா தானா தந்தன தத்தன

தானா தானா தந்தன தத்தன

தானா தானா தந்தன தத்தன

தனதான

நேசா சாரா டம்பர மட்டைகள்

பேசா தேயே சுங்கள மட்டைகள்

நீசா ளோடே யும்பழ கிக்கவர்

பொருளாலே

நீயே நானே யென்றொரு சத்தியம்

வாய்கூ சாதோ துங்க படத்திகள்

நேரா லேதா னின்றுபி லுக்கிகள்

எவர்மேலும்

ஆசா பாசா தொந்தரை யிட்டவர்

மேல்வீழ் வார்பால் சண்டிகள் கட்டழ

காயே மீதோ லெங்கு மினுக்கிகள்

வெகுமோகம்

ஆகா தாவே சந்தரு திப்பொழு

தோகோ வாவா வென்று பகட்டிக

ளாகா மோகா வம்பிகள் கிட்டிலு

முறவாமோ

பேசா தேபோய் நின்றுமி யிற்றுயிர்

வாயா வாவா வென்று குடித்தருள்

பேரா லேநீள் கஞ்சன் விடுத்தெதிர்

வருதூது

பேழ்வாய் வேதா ளம்பக டைப்பகு

வாய்நீள் மானா ளுஞ்சர ளத்தொடு

பேயானாள் போர் வென்றெதி ரிட்டவன்

மருகோனே

மாகூ டாடா டும்பகை யைப்பகை

சூரா ளோடே வன்செரு வைச்செறு

மாசூ ராபா ரெங்கும ருட்பொலி

முருகோனே

வானா டேழ்நா டும்புகழ் பெற்றிடு

தேனா றேசூழ் துங்க மலைப்பதி

மாயூ ராவாழ் குன்றை தழைத்தருள்

பெருமாளே.

பாடல் 627 ( குன்றக்குடி )

ராகம் - ; தாளம் -

தனதன தந்தத் தனதன தந்தத்

தனதன தந்தத்

தனதான

பிறர்புக ழின்சொற் பயிலுமி ளந்தைப்

பருவம தன்கைச்

சிலையாலே

பிறவித ருஞ்சிக் கதுபெரு கும்பொய்ப்

பெருவழி சென்றக்

குணமேவிச்

சிறுமைபொ ருந்திப் பெருமைமு டங்கிச்

செயலும ழிந்தற்

பமதான

தெரிவையர் தங்கட் கயலைவி ரும்பிச்

சிலசில பங்கப்

படலாமோ

செறுவித வஞ்சக் கபடமொ டெண்டிக்

கிலுமெதிர் சண்டைக்

கெழுசூரன்

கிளையுடன் மங்கத் தலைமுடி சிந்தக்

கிழிபட துன்றிப்

பொருதோனே

குறுமுநி யின்பப் பொருள்பெற அன்றுற்

பனமநு வுஞ்சொற்

குருநாதா

குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்

குடிவளர் கந்தப்

பெருமாளே.

பாடல் 628 ( குன்றக்குடி )

ராகம் -; தாளம் -

தனன தனன தனத்தந்

தனதான

தவள மதிய மெறிக்குந்

தணலாலே

சரச மதனன் விடுக்குங்

கணையாலே

கவன மிகவு முரைக்குங்

குயிலாலே

கருதி மிகவு மயக்கம்

படவோநான்

பவள நிகரு மிதழ்ப்பைங்

குறமானின்

பரிய வரையை நிகர்க்குந்

தனமேவுந்

திவளு மணிகள் கிடக்குந்

திருமார்பா

திகழு மயிலின் மலைக்கண்

பெருமாளே.

பாடல் 629 ( குன்றக்குடி )

ராகம் - ; தாளம் -

தானான தனதான தானான தனதான

தானான தனதான

தனதான

நாமேவு குயிலாலு மாமார னயிலாலு

நாடோ று மதிகாயும்

வெயிலாலும்

நார்மாதர் வசையாலும் வேயூது மிசையாலு

நாடாசை தருமோக

வலையூடே

ஏமாறி முழுநாளு மாலாகி விருதாவி

லேவாரும் விழிமாதர்

துய்ருடே

ஏகாம லழியாத மேலான பதமீதி

லேகீயு னுடன்மேவ

அருள்தாராய்

தாமோக முடனு□று பால்தேடி யுரலு□டு

தானேறி விளையாடு

மொருபோதில்

தாயாக வருசோதை காணாது களவாடு

தாமோத ரன்முராரி

மருகோனே

மாமாது வனமாது கார்மேவு சிலைமாது

மாலாகி விளையாடு

புயவீரா

வானாடு புகழ்நாடு தேனாறு புடைசூழ

மாயூர கிரிமேவு

பெருமாளே.

பாடல் 630 ( பொதியமலை )

ராகம் - ; தாளம் -

தத்த தத்த தான தான தத்த தத்த தான தான

தத்த தத்த தான தான

தனதான

மைக்க ணிக்கன் வாளி போல வுட்க ளத்தை மாறி நாடி

மட்டு முற்ற கோதை போத

முடிசூடி

மத்த கத்தி னீடு கோடு வைத்த தொத்தின் மார்பி னு�டு

வட்ட மிட்ட வாரு லாவு

முலைமீதே

இக்கு வைக்கு மாடை வீழ வெட்கி யக்க மான பேரை

யெத்தி முத்த மாடும் வாயி

னிசைபேசி

எட்டு துட்ட மாதர் பாய லிச்சை யுற்றெ னாக மாவி

யெய்த்து நித்த மான வீன

முறலாமோ

துர்க்கை பக்க சூல காளி செக்கை புக்க தாள வோசை

தொக்க திக்க தோத தீத

வெனவோதச்

சுற்றி வெற்றி யோடு தாள்கள் சுத்த நிர்த்த மாடு மாதி

சொற்கு நிற்கு மாறு தார

மொழிவோனே

திக்கு மிக்க வானி னு�டு புக்க விக்க மூடு சூரர்

திக்க முட்டி யாடு தீர

வடிவேலா

செச்சை பிச்சி மாலை மார்ப விச்சை கொச்சை
மாதி னோடு

செப்பு வெற்பில் சேய தான

பெருமாளே.

பாடல் 631 ( பொதியமலை )

ராகம் - ; தாளம் -

தனத்த தானன தனத்த தானன

தனத்த தானன தனத்த தானன

தனத்த தானன தனத்த தானன

தந்ததான

வெடித்த வார்குழல் விரித்து மேல்விழி

விழித்து மேகலை பதித்து வார்தொடு

மிகுத்த மாமுலை யசைத்து நூலின்ம

ருங்கினாடை

மினுக்கி யோலைகள் பிலுக்கி யேவளை

துலக்கி யேவிள நகைத்து கீழ்விழி

மிரட்டி யாரையு மழைத்து மால்கொடு

தந்தவாய்நீர்

குடித்து நாயென முடக்கு மேல்பிணி

யடுத்த பாதிகள் படுத்த தாய்தமர்

குலத்தர் யாவரு நகைக்க வேயுடல்

மங்குவேனைக்

குறித்து நீயரு கழைத்து மாதவர்

கணத்தின் மேவென அளித்து வேல்மயில்

கொடுத்து வேதமு மொருத்த னாமென

சிந்தைகூராய்

உடுட்டு டூடுடு டுடுட்டொ டோ வென

திகுத்த தீதிகு திகுர்த்த தாவென

உடுக்கை பேரிகை தவிற்கு ழாமுமி

ரங்குபோரில்

உலுத்த நீசர்கள் பதைப்ப மாகரி

துடிப்ப நீள்கட லெரித்து சூர்மலை

யுடைத்து நீதிகள் பரப்பி யேயவ

ரும்பராரை

அடைத்த மாசிறை விடுத்து வானுல

களிக்கு மாயிர திருக்க ணானர

சளித்து நாளுமெ னுளத்தி லேமகி

ழுங்குமாரா

அளித்த தாதையு மிகுத்த மாமனும்

அனைத்து ளோர்களு மதிக்க வேமகிழ்

அகத்ய மாமுநி பொருப்பின் மேவிய

தம்பிரானே.

பாடல் 632 ( கழுகுமலை )

ராகம் - .; தாளம் -

தனன தனதனா தனத்த தானன

தனன தனதனா தனத்த தானன

தனன தனதனா தனத்த தானன

தனதான

குதலை மொழியினார் நிதிக்கொள் வாரணி

முலையை விலைசெய்வார் தமக்கு மாமயல்

கொடிது கொடிததால் வருத்த மாயுறு

துயராலே

மதலை மறுகிவா லிபத்தி லேவெகு

பதகர் கொடியவா ளிடத்தி லேமிக

வறுமை புகல்வதே யெனக்கு மோஇனி

முடியாதே

முதல வரிவிலோ டெதிர்த்த சூருடல்

மடிய அயிலையே விடுத்த வாகரு
முகிலை யனையதா நிறத்த மால்திரு
மருகோனே
கதலி கமுகுசூழ் வயற்கு ளேயளி
யிசையை முரலமா வறத்தில் மீறிய
கழுகு மலைமகா நகர்க்குள் மேவிய
பெருமாளே.

பாடல் 633 ( கழுகுமலை )
ராகம் - .; தாளம் -
தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன
தனதான
முலையை மறைத்துத் திறப்ப ராடையை
நெகிழ வுடுத்துப் படுப்பர் வாயிதழ்
முறைமுறை முத்திக் கொடுப்பர் பூமல
ரணைமீதே
அலைகுலை யக்கொட் டணைப்ப ராடவர்
மனவலி யைத்தட் டழிப்பர் மால்பெரி
தவர்பொரு ளைக்கைப் பறிப்பர் வேசைக

ளூறவாமோ

தலைமுடி பத்துத் தெறித்து ராவண

னுடல்தொளை பட்டுத் துடிக்க வேயொரு

தநுவை வளைத்துத் தொடுத்த வாளியன்

மருகோனே

கலைமதி யப்புத் தரித்த வேணிய

ருதவிய வெற்றித் திருக்கை வேலவ

கழுகு மலைக்குட் சிறக்க மேவிய

பெருமாளே.

பாடல் 634 ( கழுகுமலை )

ராகம் - .; தாளம் -

தாந்த தனன தனன தாந்த தனன தனன

தாந்த தனன தனனந்

தனதான

கோங்க முநகுயு மெலிய வீங்கு புளக களப

மேந்து குவடு குழையும்

படிகாதல்

கூர்ந்து குழையை அமளி தோய்ந்து குலவு மினிய

தேங்கு கலவி யமுதுண்

டியல்மாதர்

வாங்கு பகழி விழியை மோந்து பகலு மிரவும்

வாய்ந்த துயிலை மிகவுந்

தணியாத

வாஞ்சை யுடைய அடிமை நீண்ட பிறவி யலையை

நீந்தி அமல அடிவந்

தடைவேனோ

ஓங்க லனைய பெரிய சோங்கு தகர மகர

மோங்கு ததியின் முழுகும்

பொருசூரும்

ஒய்ந்து பிரமன் வெருவ வாய்ந்த குருகு மலையில்

ஊர்ந்து மயில துலவுந்

தனிவேலா

வேங்கை யடவி மறவர் ஏங்க வனிதை யுருக

வேங்கை வடிவு மருவுங்

குமரேசா

வேண்டு மடியர் புலவர் வேண்ட அரிய பொருளை

வேண்டு மளவி லுதவும்

பெருமாளே.

பாடல் 635 ( வள்ளியூர் )

ராகம் - அடாணா ; தாளம் - அங்கதாளம் (6 1/2)

தகிட-1 1/2, தகதிமி-2, தகதிமிதக-3

தய்ய தானன

தனதான

அல்லில் நேருமி

னதுதானும்

அல்ல தாகிய

உடல்மாயை

கல்லி னேரஅ

வழிதோறுங்

கையு நானுமு

லையலாமோ

சொல்லி நேர்படு

முதுசூரர்

தொய்ய வூர்கெட

விடும்வேலா

வல்லி மாரிரு

புறமாக

வள்ளி யூருறை

பெருமாளே.

பாடல் 636 ( கதிர்காமம் )

ராகம் - குந்தல வராலி; தாளம் - ஆதி

தனதனன தான தனதனன தான

தனதனன தான

தனதான

திருமக ளுலாவு மிருபுய முராரி

திருமருக நாமப்

பெருமாள்காண்

செகதலமும் வானு மிகுதிபெறு பாடல்

தெரிதரு குமாரப்

பெருமாள்காண்

மருவுமடி யார்கள் மனதில்விளை யாடு

மரகதம யூரப்

பெருமாள்காண்

மணிதரளம் வீசி யணியருவி சூழ

மருவுகதிர் காமப்

பெருமாள்காண்

அருவரைகள் நீறு படஅசுரர் மாள

அமர்பொருத வீரப்

பெருமாள்காண்

அரவுபிறை வாரி விரவுசடை வேணி

அமலர்குரு நாதப்

பெருமாள்காண்

இருவினையி லாத தருவினைவி டாத

இமையவர்கு லேசப்

பெருமாள்காண்

இலகுசிலை வேடர் கொடியினதி பார

இருதனவி நோதப்

பெருமாளே.

பாடல் 637 ( கதிர்காமம் )

ராகம் - .; தாளம் -

தனன தான தானான தனன தான தானான

தனன தான தானான

தனதான

அலகின் மாறு மாறாத கலதி பூத வேதாளி

அடைவில் ஞாளி கோமாளி

அறமீயா

அழிவு கோளி நாணாது புழுகு பூசி வாழ்மாதர்

அருளி லாத தோடாய

மருளாகிப்

பலக லாக ராமேரு மலைக ராச லாவீசு

பருவ மேக மேதாரு

வெனயாதும்

பரிவு றாத மாபாதர் வரிசை பாடி யோயாத

பரிசில் தேடி மாயாத

படிபாராய்

இலகு வேலை நீழ்வாடை யெரிகொள் வேலை மாசூரி

லெறியும் வேலை மாறாத

திறல்வீரா

இமய மாது பாகீர திநதி பால காசார

லிறைவி கான மால்வேடர்

சுதைபாகா

கலக வாரி போல்மோதி வடவை யாறு சூழ்சீத

கதிர காம மூதூரி

லிளையோனே

கனக நாடு வீடாய கடவுள் யானை வாழ்வான

கருணை மேரு வேதேவர்

பெருமாளே.

பாடல் 638 ( கதிர்காமம் )

ராகம் - காம்போதி; தாளம் - மிஸ்ரசாபு (3 1/2)

தகிட-1 1/2, தகதிமி-2

தனத்தத் தனதான தானன

தனத்தத் தனதான தானன

தனத்தத் தனதான தானன

தனதான

உடுக்கத் துகில்வேணு நீள்பசி

யவிக்கக் கனபானம் வேணுநல்

ஒளிக்குப் புனலாடை வேணுமெய்

யுறுநோயை

ஒழிக்கப் பரிகாரம் வேணுமுள்

இருக்கச் சிறுநாரி வேணுமொர்

படுக்கத் தனிவீடு வேணுமிவ்

வகையாவுங்

கிடைத்துக் க்ருஹவாசி யாகிய

மயக்கக் கடலாடி நீடிய

கிளைக்குப் பரிபால னாயுயி

ரவமேபோம்

க்ருபைச்சித் தமுஞான போதமு

மழைத்துத் தரவேணு மூழ்பவ

கிரிக்குட் சுழல்வேனை யாளுவ

தொருநாளே

குடக்குச் சிலதூதர் தேடுக

வடக்குச் சிலதூதர் நாடுக

குணக்குச் சிலதூதர் தேடுக

வெனமேவிக்

குறிப்பிற் குறிகாணு மாருதி

யினித்தெற் கொருதூது போவது

குறிப்பிற் குறிபோன போதிலும்

வரலாமோ

அடிக்குத் திரகார ராகிய

அரக்கர்க் கிளையாத தீரனு

மலைக்கப் புறமேவி மாதுறு

வனமேசென்

றருட்பொற் றிருவாழி மோதிர

மளித்துற் றவர்மேல் மனோகர

மளித்துக் கதிர்காம மேவிய

பெருமாளே.

பாடல் 639 ( கதிர்காமம் )

ராகம் - சக்ரவாஹம்; தாளம் - திஸ்ர்ருபகம் - திஸ்ரநடை (7 1/2)

(எடுப்பு - /3 0)

தனன தான தத்த

தனதான

எதிரி லாத பத்தி

தனைமேவி

இனிய தாள்நி னைப்பை

யிருபோதும்

இதய வாரி திக்கு

ளுறவாகி

எனது ளேசி றக்க

அருள்வாயே

கதிர காம வெற்பி

லுறைவோனே

கனக மேரு வொத்த

புயவீரா

மதுர வாணி யுற்ற

கழலோனே

வழுதி கூனி மிர்த்த

பெருமாளே.

பாடல் 640 ( கதிர்காமம் )

ராகம் - தோடி; தாளம் - ஆதி (2 களை)

தனதன தனதன தனதன தனதன

தானத் தனந்தந்

தனதான

கடகட கருவிகள் தபவகி ரதிர்கதிர்

காமத் தரங்கம்

மலைவீரா

கனகத நககுலி புணரித குணகுக

காமத் தனஞ்சம்

புயனோட

வடசிக ரகிரித விடுபட நடமிடு

மாவிற் புகுங்கந்

தவழாது

வழிவழி தமரென வழிபடு கிலனென

வாவிக் கினம்பொன்

றிடுமோதான்

அடவியி ருடியபி நவகும ரியடிமை

யாயப் புனஞ்சென்

றயர்வோனே

அயிலவ சமுடன ததிதிரி தருகவி

யாளப் புயங்கொண்

டருள்வோனே

இடமொரு மரகத மயில்மிசை வடிவுள

ஏழைக் கிடங்கண்

டவர்வாழ்வே

இதமொழி பகரினு மதமொழி பகரினு

மேழைக் கிரங்கும்

பெருமாளே.

பாடல் 641 ( கதிர்காமம் )

ராகம் - ; தாளம் -

தனதனன தானத்த தனதனன தானத்த

தனதனன தானத்த

தனதான தானனா

சமரமுக வேலொத்த விழிபுரள வாரிட்ட

தனமசைய வீதிக்குள்

மயில்போ லுலாவியே

சரியைக்ரியை யோகத்தின் வழிவருக்கு பாசுத்தர்

தமையுணர ராகத்தின்

வசமாக மேவியே

உமதடிய னாருக்கு மனுமரண மாயைக்கு

முரியவர் மகாதத்தை

யெனுமாய மாதரார்

ஒளிரமளி பீடத்தி லமடுபடு வேனுக்கு

முனதருள்க்ரு பாசித்த

மருள்கூர வேணுமே

இமகிரிகு மாரத்தி யநுபவைப ராசத்தி

யெழுதரிய காயத்ரி

யுமையாள் குமாரனே

எயினர்மட மானுக்கு மடலெழுதி மோகித்து

இதணருகு சேவிக்கு

முருகா விசாகனே

அமரர்சிறை மீள்விக்க அமர்செய்துப்ர தாபிக்கு

மதிகவித சாமர்த்ய

கவிராஜ ராஜனே

அழுதுலகை வாழ்வித்த கவுணியகு லாதித்த

அரியகதிர் காமத்தி

லுரியாபி ராமனே.

பாடல் 642 ( கதிர்காமம் )

ராகம் - காபி; தாளம் - ஆதி - கண்டநடை (20)

(எடுப்பு - அதீதம்)

தனத்தா தனத்தா தனத்தா தனத்தா

தனத்தா தனத்தா

தனதான

சரத்தே யுதித்தா யுரத்தே குதித்தே

சமர்த்தா யெதிர்த்தே

வருசூரைச்

சரிப்போன மட்டே விடுத்தா யடுத்தாய்

தகர்த்தா யுடற்றா

னிருகூறாச்

சிரத்தோ டுரத்தோ டறுத்தே குவித்தாய்

செகுத்தாய் பலத்தார்

விருதாகச்

சிறைச்சேவல் பெற்றாய் வலக்கார முற்றாய்

திருத்தா மரைத்தா

ளருள்வாயே

புரத்தார் வரத்தார் சரச்சே கரத்தார்

பொரத்தா னெதிர்தே

வருபோது

பொறுத்தார் பரித்தார் சிரித்தா ரெரித்தார்

பொரித்தார் நுதற்பார்

வையிலேபின்

கரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தார்

கருத்தார் மருத்தூர்

மதனாரைக்

கரிக்கோல மிட்டார் கணுக்கான முத்தே

கதிர்க்காம முற்றார்

முருகோனே

பாடல் 643 ( கதிர்காமம் )

ராகம் - ; தாளம் -

தனதனா தத்தனத் தனதனா தத்தனத்

தனதனா தத்தனத்

தனதான

சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்

சகலயோ கர்க்குமெட்

டரிதாய

சமயபே தத்தினுக் கணுகொணா மெய்ப்பொருட்

டருபரா சத்தியிற்

பரமான

துரியமே லற்புதப் பரமஞா னத்தனிச்

சுடர்வியா பித்தநற்

பதிநீடு

துகளில்சா யுச்சியக் கதியையீ றற்றசொற்

சுகசெர்ரு பத்தையுற்

றடைவேனோ

புரிசைசூழ் செய்ப்பதிக் குரியசா மர்த்யசற்

புருஷவீ ரத்துவிக்

ரமசூரன்

புரளவேல் தொட்டகைக் குமரமேன் மைத்திருப்

புகழையோ தற்கெனக்

கருள்வோனே

கரியயூ கத்திரட் பலவின்மீ திற்சுளைக்

கனிகள்பீ றிப்புசித்

தமராடிக்

கதலிசூ தத்தினிற் பயிலுமீ ழத்தினிற்

கதிரகா மக்கிரிப்

பெருமாளே.

பாடல் 644 ( கதிர்காமம் )

ராகம் - ; தாளம் -

தானதன தத்தத்த தானதன தத்தத்த

தானதன தத்தத்த

தனதான

பாரவித முத்தப்ப டீரபுள கப்பொற்ப

யோதர நெருக்குற்ற

இடையாலே

பாகளவு தித்தித்த கீதமொழி யிற்புட்ப

பாணவிழி யிற்பொத்தி

விடுமாதர்

காரணி குழற்கற்றை மேல்மகர மொப்பித்த

காதில்முக வட்டத்தி

லதிமோக

காமுக னகப்பட்ட வாசையைம றப்பித்த

கால்களைம றக்கைக்கும்

வருமோதான்

தேரிரவி யுட்கிப்பு காமுதுபு ரத்திற்றெ

சாசிரனை மர்த்தித்த

அரிமாயன்

சீர்மருக அத்யுக்ர யானைபடும் ரத்நத்ரி

கோணசயி லத்துக்ர

கதிர்காம

வீரபுன வெற்பிற்க லாபியெயி னச்சிக்கு

மேகலை யிடைக்கொத்தி

னிருதாளின்

வேரிமழை யிற்பச்சை வேயிலரு ணக்கற்றை

வேல்களில கப்பட்ட

பெருமாளே.

பாடல் 645 ( கதிர்காமம் )

ராகம் - ; தாளம் -

தனதனா தத்த தனதனா தத்த

தனதனா தத்த

தனதான

மருவறா வெற்றி மலர்தொடா விற்கை

வலிசெயா நிற்கு

மதனாலும்

மதில்கள்தா வுற்ற கலைபடா வட்ட

மதிசுடா நிற்கு

மதனாலும்

இருகணால் முத்த முதிரயா மத்தி

னிரவினால் நித்த

மெலியாதே

இடருறா மெத்த மயல்கொளா நிற்கு

மிவளைவாழ் விக்க

வரவேணும்

கரிகள்சேர் வெற்பி லரியவே டிச்சி

கலவிகூர் சித்ர

மணிமார்பா

கனகமா ணிக்க வடிவனே மிக்க

கதிரகா மத்தி

லுறைவோனே

முருகனே பத்த ரருகனே முத்தி

முதல்வனே பச்சை

மயில்வீரா

முடுகிமே லிட்ட கொடியசூர் கெட்டு

முறியவேல் தொட்ட

பெருமாளே.

பாடல் 646 ( கதிர்காமம் )

ராகம் - குந்தல வராலி; தாளம் - அங்கதாளம் (7)

தகதகிட-2 1/2, தகிட-1 1/2, தகதிமிதக-3

தானதன தானத்

தனதான

மாதர்வச மாயுற்

றுழல்வாரும்

மாதவமெ ணாமற்

றிரிவாரும்

தீதகல வோதிப்

பணியாரும்

தீநரக மீதிற்

றிகழ்வாரே

நாதவொளி யேநற்

குணசீலா

நாரியிரு வோரைப்

புணர்வேலா

சோதிசிவ ஞானக்

குமரேசா

தோமில் கதிர்காமப்

பெருமாளே.

பாடல் 647 ( கதிர்காமம் )

ராகம் - ; தாளம் -

தனன தான தான தத்த தனன தான தான தத்த

தனன தான தான தத்த

தனதான

முதிரு மார வார நட்பொ டிலகு மார வார மெற்றி

முனியு மார வார முற்ற

கடலாலே

முடிவி லாத தோர் வடக்கி லெரியு மால மார்பி டத்து

முழுகி யேறி மேலெ றிக்கு

நிலவாலே

வெதிரி லாயர் வாயில் வைத்து மதுர ராக நீடி சைக்கும்

வினைவி டாத தாய ருக்கு

மழியாதே

விளையு மோக போக முற்றி அளவி லாத காதல் பெற்ற

விகட மாதை நீ யணைக்க

வரவேணும்

கதிர காம மாந கர்க்கு ளெதிரி லாத வேல்த ரித்த

கடவு ளேக லாப சித்ர

மயில்வீரா

கயலு லாம்வி லோச னத்தி களப மார்ப யோத ரத்தி

ககன மேவு வாளொ ருத்தி

மணவாளா

அதிர வீசி யாடும் வெற்றி விடையி லேறு மீசர் கற்க

அரிய ஞான வாச கத்தை

யருள்வோனே

அகில லோக மீது சுற்றி யசுரர் லோக நீறெ ழுப்பி

அமரர் லோகம் வாழ வைத்த

பெருமாளே.

பாடல் 648 ( கதிர்காமம் )

ராகம் - பீம்பளாஸ்; தாளம் - அங்கதாளம் (5 1/2)

தகதகிட-2 1/2, தகிட-1 1/2, தகிட-1 1/2

தனதனன தான தந்த தனதனன தான தந்த

தனதனன தான தந்த

தனதான

வருபவர்க ளோலை கொண்டு நமனுடைய தூத
ரென்று

மடிபிடிய தாக நின்று

தொடர்போது

மயலதுபொ லாத வம்பன் விரகுடைய னாகு
மென்று

வசைகளுட னேதொ டர்ந்து

அடைவார்கள்

கருவியத னாலெ றிந்து சதைகள்தனை யேய ரிந்து

கரியபுன லேசொ ரிந்து

விடவேதான்

கழுமுனையி லேயி ரென்று விடுமெனும வேளை
கண்டு

கடுகிவர வேணு மெந்தன்

முனமேதான்

பரகிரியு லாவு செந்தி மனையினுட னேயி டும்பன்

பழநிதனி லேயி ருந்த

குமரேசா

பதிகள் பல வாயி ரங்கள் மலைகள்வெகு கோடி நின்ற

பதமடியர் காண வந்த

கதிர்காமா

அரவுபிறை பூளை தும்பை விலுவமொடு தூர்வை கொன்றை

யணிவர் சடை யாளர் தந்த

முருகோனே

அரகரசி வாய சம்புலத குருபரகு மார நம்பு

மடியர்தமை யாள வந்த

பெருமாளே.

பாடல் 649 ( கதிர்காமம் )

ராகம் - ; தாளம் -

தனத்த தானன தனத்த தானன

தனத்த தானன தனத்த தானன

தனத்த தானன தனத்த தானன

தனதான

தொடுத்த வாளென விழித்து மார்முலை

யசைத்து மேகலை மறைத்து மூடிகள்

துடித்து நேர்கலை நெகிழ்த்து மாவியல்

கொளுமாதர்

சுகித்த ஹாவென நகைத்து மேல்விழ

முடித்த வார்குழல் விரித்து மேவிதழ்

துவர்த்த வாய்சுரு ளடக்கி மால்கொடு

வழியேபோய்ப்

படுத்த பாயலி லணைத்து மாமுலை

பிடித்து மார்பொடு மழுத்தி வாயிதழ்

கடித்து நாணம தழித்த பாவிகள்

வலையாலே

பலித்து நோய்பிணி கிடத்து பாய்மிசை

வெளுத்து வாய்களு மலத்தி னாயென

பசித்து தாகமு மெடுத்தி டாவுயி

ருழல்வேனோ

வெடுத்த தாடகை சினத்தை யோர்கணை

விடுத்து யாகமும் நடத்தி யேயொரு

மிகுத்த வார்சிலை முறித்த மாயவன்

மருகோனே

விதித்து ஞாலம தளித்த வேதனை

யதிர்த்து வோர்முடி கரத்து லாயனல்

விழித்து காமனை யெரித்த தாதையர்

குருநாதா

அடுத்த ஆயிர விடப்ப ணாமுடி

நடுக்க மாமலை பிளக்க வேகவ

டரக்கர் மாமுடி பதைக்க வேபொரு

மயில்வீரா

அறத்தில் வாழுமை சிறக்க வேயறு

முகத்தி னோடணி குறத்தி யானையொ

டருக்கொ ணாமலை தருக்கு லாவிய

பெருமாளே.

பாடல் 650 ( திருக்கோணமலை )

ராகம் - ; தாளம் -

தனத்த தானன தனத்தான தானன

தனத்த தானன தனத்தான தானன

தனத்த தானன தனத்தான தானன

தனதான

விலைக்கு மேனியி லணிக்கோவை மேகலை

தரித்த வாடையு மணிப்பூணு மாகவெ

மினுக்கு மாதர்க ளிடக்காம மூழ்கியெ

மயலூறி

மிகுத்த காமிய னெனப்பாரு ளொரெதிர்

நகைக்க வேயுட லெடுத்தேவி யாகுல

வெறுப்ப தாகியெ யுழைத்தேவி டாய்படு

கொடியேனைக்

கலக்க மாகவெ மலக்கூடி லேமிகு

பிணிக்கு ளாகியெ தவிக்காம லேயுனை

கவிக்கு ளாய்சொலி கடைத்தேற வேசெயு

மொருவாழ்வே

கதிக்கு நாதனி யுனைத்தேடி யேபுகு

முரைக்கு நாயெனை யருட்பார்வை யாகவெ

கழற்கு ளாகவெ சிறப்பான தாயருள்

தரவேணும்

மலைக்கு நாயக சிவக்காமி நாயகர்

திருக்கு மாரனெ முகத்தாறு தேசிக

வடிப்ப மாதொரு குறப்பாவை யாள்மகிழ்

தருவேளே

வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர்

அகத்ய மாமுநி யிடைக்காடர் கீரனும்

வகுத்த பாவினில் பொருட்கோல மாய்வரு

முருகோனே

நிலைக்கு நான்மறை மகத்தான பூசுரர்
திருக்கொ ணாமலை தலத்தாரு கோபுர
நிலைக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில்
வருவோனே
நிகழ்த்து மேழ்பவ கடற்சூறை யாகவெ
யெடுத்த வேல்கொடு பொடித்தூள தாஎறி
நினைத்த காரிய மநுக்கூல மேபுரி
பெருமாளே.

பாடல் 651 ( காசி )
ராகம் - சந்த்ர கௌன்ஸ்; தாளம் - மிஸ்ரசாபு (3 1/2)
தகிட-1 1/2, தகதிமி-2
தான தத்தன தான தானன
தான தத்தன தான தானன
தான தத்தன தான தானன
தனதான
தார ணிக்கதி பாவி யாய்வெகு
சூது மெத்திய மூட னாய்மன
சாத னைக்கள வாணி யாயுறு
மதிமோக
தாப மிக்குள வீண னாய்பொரு

வேல்வி ழிச்சிய ராகு மாதர்கள்
தாமு யச்செயு மேது தேடிய
நினைவாகிப்
பூர ணச்சிவ ஞான காவிய
மோது தற்புணர் வான நேயர்கள்
பூசு மெய்த்திரு நீறி டாஇரு
வினையேனைப்
பூசி மெய்ப்பத மான சேவடி
காண வைத்தருள் ஞான மாகிய
போத கத்தினை யேயு மாறருள்
புரிவாயே
வார ணத்தினை யேக ராவுமு
னேவ ளைத்திடு போதுமேவிய
மாய வற்கித மாக வீறிய
மருகோனே
வாழு முப்புர வீற தானது
நீறெ ழப்புகை யாக வேசெய்த
மாம திப்பிறை வேணி யாரருள்
புதல்வோனே
கார ணக்குறி யான நீதிய
ரான வர்க்குமு னாக வேநெறி

காவி யச்சிவ நூலை யோதிய

கதிர்வேலா

கான கக்குற மாதை மேவிய

ஞான சொற்கும ராப ராபர

காசி யிற்பிர தாப மாயுறை

பெருமாளே.

பாடல் 652 ( காசி )

ராகம் - ; தாளம் -

தந்தத் தனதன தானன தானன

தந்தத் தனதன தானன தானன

தந்தத் தனதன தானன தானன

தனதான

மங்கைக் கணவனும் வாழ்சிவ ணாமயல்

பங்கப் படமிசை யேபனி போல்மதம்

வந்துட் பெருகிட வேவிதி யானவ

னருள்மேவி

வண்டுத் தடிகைபொ லாகியெ நாள்பல

பந்துப் பனைபழ மோடிள நீர்குட

மண்டிப் பலபல வாய்வினை கோலும

வழியாலே

திங்கட் பதுசெல வேதலை கீழுற

வந்துப் புவிதனி லேமத லாயென

சிந்தைக் குழவியெ னாவனை தாதையு

மருள்கூரச்

செம்பொற் றடமுலை பால்குடி நாள்பல

பண்புத் தவழ்நடை போய்வித மாய்பல

சிங்கிப் பெருவிழி யாரவ மாயதி

லழிவேனோ

அங்கைத் தரியென வேயொரு பாலக

னின்பக் கிருபைய தாயொரு தூண்மிசை

அம்பற் கொடுவரி யாயிரண் யாசுர

னுடல்பீறி

அண்டர்க் கருள்பெரு மான் முதி ராவணி

சங்குத் திகிரிக ரோனரி நாரவ

ரங்கத் திருவணை மேல்துயில் நாரணன்

மருகோனே

கங்கைச் சடைமுடி யோனிட மேவிய

தங்கப் பவளொளி பால்மதி போல்முக

கங்குற் றரிகுழ லாள்பர மேசுரி

யருள்பாலா

கந்துப் பரிமயில் வாகன மீதிரு

கொங்கைக் குறமக ளாசையொ டேமகிழ்

கங்கைப் பதிநதி காசியில் மேவிய

பெருமாளே.

பாடல் 653 ( காசி )

ராகம் - சாரங்கா; தாளம் - அங்கதாளம் (8 1/2)

தகிட-1 1/2, தகதிமி-2, தகதிமி-2, தகதிமி-2, தக-1

தான தந்தன தானன

தனதான

வேழ முண்ட விளாகனி

யதுபோல

மேனி கொண்டு வியாபக

மயலு�றி

நாளு மிண்டர்கள் போல்மிக

அயர்வாகி

நானு நைந்து விடாதருள்

புரிவாயே

மாள அன்றம ணீசர்கள்

கழுவேற

வாதில் வென்ற சிகாமணி

மயில்வீரா

காள கண்ட னுமாபதி

தருபாலா

காசி கங்கையில் மேவிய

பெருமாளே.

பாடல் 654 ( மாயாபுரி )

ராகம் - பந்துவராளி; தாளம் - அங்கதாளம் (8 1/2)

தகதிமி-2, தகிட-1 1/2, தகதிமி-2, தகதிமிதக-3

தனன தனந்த தானன

தனதான

சிகர மருந்த வாழ்வது

சிவஞானம்

சிதறி யலைந்து போவது

செயலாசை

மகர நெருங்க வீழ்வது

மகமாய

மருவி நினைந்தி டாவருள்

புரிவாயே

அகர நெருங்கி னாமய

முறவாகி

அவச மொடுங்கை யாறொடு

முனமேகிக்

ககன மிசைந்த சூரியர்

புகமாயை

கருணை பொழிந்து மேவிய

பெருமாளே.

பாடல் 655 ( வயிரவிவனம் )

ராகம் - ஸரஸ்வதி ; தாளம் - அங்கதாளம் (5 1/2)

தகதிமி-2, தகதிமி-2, தகிட-1 1/2

தனதன தனத்த தான தனதன தனத்த தான

தனதன தனத்த தான

தனதான

அருவரை யெடுத்த வீர னெரிபட விரற்க ளூணு

மரனிட மிருக்கு மாயி

யருள்வோனே

அலைகட லடைத்த ராமன் மிகமன மகிழ்ச்சி கூரு

மணிமயில நடத்து மாசை

மருகோனே

பருதியி னொளிக்கண் வீறும் அறுமுக நிரைத்த
தோள்ப

னிருகர மிகுத்த பார

முருகாநின்

பதமல ருளத்தி னாளு நினைவுறு கருத்தர் தாள்கள்

பணியவு மெனக்கு ஞானம்

அருள்வாயே

சுருதிக ளுரைத்த வேத னுரைமொழி தனக் குளாதி

சொலுவென வுரைத்த ஞான

குருநாதா

சுரர்பதி தழைத்து வாழ அமர்சிறை யனைத்து மீள

துணிபட அரக்கர் மாள

விடும்வேலா

மருமலர் மணக்கும் வாச நிறைதரு தருக்கள் சூழும்

வயல்புடை கிடக்கு நீல

மலர்வாவி

வளமுறு தடத்தி னோடு சரஸ்வதி நதிக்கண் வீறு

வயிரவி வனத்தில் மேவு

பெருமாளே.

பாடல் 656 ( வெள்ளிகரம் )

ராகம் - சாமா; தாளம் - அங்கதாளம் (15)

தகதிமி-2, தகிட-1 1/2, தகதிமி-2, தகிட-1 1/2

தகதிமி-2, தகிட-1 1/2, தகிட-1 1/2, தகதிமிதக-3

தனதன தனன தனதன தனன

தய்ய தனத்த தந்த

தனதானா

அடலரி மகவு விதிவழி யொழுகு

மைவ ருமொய்க்கு ரம்பை

யுடனாளும்

அலைகட லுலகி லலம்வரு கலக

வைவர் தமக்கு டைந்து

தடுமாறி

இடர்படு மடிமை யுளமுரை யுடலொ

டெல்லை விடப்ர பஞ்ச

மயல்தீர

எனதற நினது கழல்பெற மவுன

வெல்லை குறிப்ப தொன்று

புகல்வாயே

வடமணி முலையு மழகிய முகமும்

வள்ளை யெனத்த யங்கு

மிருகாதும்

மரகத வடிவு மடலிடை யெழுதி

வள்ளி புனத்தில் நின்ற

மயில்வீரா

விடதர திகுணர் சசிதரர் நிமலர்

வெள்ளி மலைச்ச யம்பு

குருநாதா

விகசித கமல பரிபுர முளரி

வெள்ளி கரத்த மர்ந்த

பெருமாளே.

பாடல் 657 ( வெள்ளிகரம் )

ராகம் - மாயாமாளவகௌளை ; தாளம் - அங்கதாளம் (15)

தகதிமி-2, தகிட-1 1/2, தகதிமி-2, தகிட-1 1/2

தகதிமி-2, தகிட-1 1/2, தகிட-1 1/2, தகதிமிதக-3

தனதன தனன தனதன தனன

தய்ய தனத்த தந்த

தனதான

சிகரிக ளிடிய நடநவில் கலவி

செவ்வி மலர்க்க டம்பு

சிறுவாள்வேல்

திருமுக சமுக சததள முளரி

திவ்ய கரத்தி ணங்கு

பொருசேவல்

அகிலடி பறிய எறிதிரை யருவி

ஐவன வெற்பில் வஞ்சி

கணவாளன்

றகிலமு முணர மொழிதரு மொழியி

னல்லது பொற்பதங்கள்

பெறலாமோ

நிகரிட அரிய சிவசுத பரம

நிர்வச னப்ர சங்க

குருநாதா

நிரைதிகழ் பொதுவர் நெறிபடு பழைய

நெல்லி மரத்த மர்ந்த

அபிராம

வெகுமுக ககன நதிமதி யிதழி

வில்வ முடித்த நம்பர்

பெருவாழ்வே

விகசித கமல பரிமள கமல

வெள்ளி கரத்த மர்ந்த

பெருமாளே.

பாடல் 658 ( வெள்ளிகரம் )

ராகம் - ; தாளம் -

தனதன தய்ய தனதன தய்ய

தனதன தய்ய

தனதான

குவலய மல்கு தவலிகள் முல்லை

குளிர்நகை சொல்லு

முதுபாகு

குழையிள வள்ளை யிடைசிறு வல்லி

குயமுலை கொள்ளை

விழைமேவிக்

கவலைசெய் வல்ல தவலரு முள்ள

கலவியில் தெள்ளு

கவிமாலை

கடிமல ரைய அணிவன செய்ய

கழலிணை பைய

அருள்வாயே

தவநெறி யுள்ளு சிவமுனி துள்ளு

தனியுழை புள்ளி

யுடனாடித்

தருபுன வள்ளி மலைமற வள்ளி

தருதினை மெள்ள

நுகர்வோனே

அவநெறி சொல்லு மவரவை கொல்லு

மழகிய வெள்ளி

நகர்வாழ்வே

அடையலர் செல்வ மளறிடை செல்ல

அமர்செய வல்ல

பெருமாளே.

பாடல் 659 ( வெள்ளிகரம் )

ராகம் - ; தாளம் -

தனதன தய்ய தனதன தய்ய

தனதன தய்ய

தனதான

பொருவன கள்ள இருகயல் வள்ளை

புரிகுழை தள்ளி

விளையாடும்

புளகித வல்லி யிளகித வல்லி

புரியிள முல்லை

நகைமீதே

உருகிட வுள்ள விரகுடை யுள்ள

முலகுயி ருள்ள

பொழுதேநின்

றுமைதரு செல்வ னெனமிகு கல்வி

யுணர்வொடு சொல்ல

வுணராதோ

மருமலர் வள்ளி புரமுள வள்ளி

மலைமற வள்ளி

மணவாளா

வளர்புவி யெல்லை யளவிடு தொல்லை

மரகத நல்ல

மயில்வீரா

அருவரை விள்ள அயில்விடு மள்ள

அணிவயல் வெள்ளி

நகர்வாழ்வே

அடையலர் செல்வ மளறிடை செல்ல

அமர்செய வல்ல

பெருமாளே.

பாடல் 660 ( வெள்ளிகரம் )

ராகம் - ; தாளம் -

தய்ய தய்ய தய்ய தய்ய

தய்ய தய்ய

தனதான

கள்ள முள்ள வல்ல வல்லி

கையி லள்ளி

பொருளீயக்

கல்லு நெல்லு வெள்ளி தெள்ளு

கல்வி செல்வர்

கிளைமாய

அள்ளல் துள்ளி ஐவர் செல்லு

மல்லல் சொல்ல

முடியாதே

ஐய ரைய மெய்யர் மெய்ய

ஐய செய்ய

கழல்தாராய்

வள்ளல் புள்ளி நவ்வி நல்கு

வள்ளி கிள்ளை

மொழியாலே

மைய லெய்து மைய செய்யில்

வையில் வெள்வ

ளைகளேற

மெள்ள மள்ளர் கொய்யு நெல்லின்

வெள்ள வெள்ளி

நகர்வாழ்வே

வெய்ய சைய வில்லி சொல்லை

வெல்ல வல்ல

பெருமாளே.

பாடல் 661 ( வெள்ளிகரம் )

ராகம் -

.; தாளம் -

தய்ய தய்ய தய்ய தய்ய

தய்ய தய்ய

தனதான

தொய்யில் செய்யில் நொய்யர் கையர்

தொய்யு மைய

இடையாலுந்

துள்ளி வள்ளை தள்ளி யுள்ளல்

சொல்லு கள்ள

விழியாலும்

மைய செவ்வி மவ்வல் முல்லை

மல்கு நல்ல

குழலாலும்

மையல் கொள்ள எள்ளல் செய்யும்

வல்லி சொல்லை

மகிழ்வேனோ

செய்ய துய்ய புள்ளி நவ்வி

செல்வி கல்வ

ரையிலேனல்

தெய்வ வள்ளி மையல் கொள்ளு

செல்வ பிள்ளை

முருகோனே

மெய்யர் மெய்ய பொய்யர் பொய்ய

வெள்ளை வெள்ளி

நகர்வாழ்வே

வெய்ய சைய வில்லி சொல்லை

வெல்ல வல்ல

பெருமாளே.

பாடல் 662 ( வெள்ளிகரம் )

ராகம் - குமுதக்ரியா; தாளம் - ஆதி

தய்யதன தான தய்யதன தான

தய்யதன தான

தனதான

இல்லையென நாணி யுள்ளதின் மறாம

லெள்ளினள வேனும்

பகிராரை

எவ்வமென நாடி யுய்வகையி லேனை

யெவ்வகையு நாமங்

கவியாகச்

சொல்லவறி யேனை யெல்லைதெரி யாத

தொல்லைமுத லேதென்

றுணரேனைத்

தொய்யுமுடல் பேணு பொய்யனைவி டாது

துய்யகழ லாளுந்

திறமேதோ

வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ

மையவரை பாகம்

படமோது

மையுலவு சோலை செய்யகுளிர் சாரல்

வள்ளிமலை வாழுங்

கொடிகோவே

வெல்லுமயி லேறு வல்லகும ரேச

வெள்ளிலுட னீபம்

புனைவோனே

வெள்ளிமணி மாட மல்குதிரு வீதி

வெள்ளிநகர் மேவும்

பெருமாளே.

பாடல் 663 ( வெள்ளிகரம் )

ராகம் - .; தாளம் -

தய்யதன தான தய்யதன தான

தய்யதன தான

தனதான

பையரவு போலு நொய்யஇடை மாதர்

பையவரு கோலந்

தனைநாடிப்

பையலென வோடி மையல்மிகு மோக

பவ்வமிசை வீழுந்

தனிநாயேன்

உய்யவொரு கால மையவுப தேச

முள்ளுருக நாடும்

படிபேசி

உள்ளதுமி லாது மல்லதவி ரோத

உல்லசவி நோதந்

தருவாயே

வையமுழு தாளு மையகும ரேச

வள்ளிபடர் கானம்

புடைசூழும்

வள்ளிமலை வாழும் வள்ளிமண வாள

மையுததி யேழுங்

கனல்மூள

வெய்யநிரு தேசர் சையமுடன் வீழ

வெல்லயில்வி நோதம்

புரிவோனே

வெள்ளிமணி மாட மல்குதிரு வீதி

வெள்ளிநகர் மேவும்

பெருமாளே.

பாடல் 664 ( வெள்ளிகரம் )

ராகம் - பிருந்தாவன ஸாரங்கா ; தாளம் - அங்கதாளம் (23 1/2)

தகதிமிதகதிமி-4, தகதிமி தகதிமி-4

தகதிமி-2, தகிட-1 1/2, தகிட-1 1/2

தகதிமிதகதிமிதகதிமிதக-7, தகிடதகதிமி-3 1/2

தனன தனாதன தனன தனாதன தய்ய தனத்த தந்த

தானாதன தானந் தானன

தந்ததான

வதன சரோருக நயன சிலீமுக வள்ளி புனத்தில் நின்று

வாராய்பதி காதங் காதரை

யொன்

முரும்

வயலு மொரேவிடை யெனவொரு காவிடை வல்லப

மற்றழிந்து மாலாய்மட லேறுங் காமுக

எம்பிரானே

இதவிய காணிவை தவையென வேடுவ னெய்திடு மெச்சில் தின்று

லீலாசல மாடுந் தூயவன்

மைந்தநாளும்

இளையவ மூதுரை மலைகிழ வோனென வெள்ள மெனக் கலந்து

நூறாயிர பேதஞ் சாதமொ

ழிந்தவாதான்

கதைகன சாபதி கிரிவளை வாளொடு கைவசி வித்தநந்த

கோபாலம கீபன் தேவிம

கிழ்ந்துவாழக்

கயிறொ டுலு�கல முருள வுலாவிய கள்வ னறப் பயந்து

ஆகாய பாலம் பீறநி

மிர்ந்துநீள

விதரண மாவலி வெருவ மகாவ்ருத வெள்ள
வெளுக்க நின்ற

நாராயண மாமன் சேயைம

னிந்தகோவே

விளைவய லு�டிடை வளைவிளை யாடிய
வெள்ளிநகர்க் கமர்ந்த

வேலாயுத மேவுந் தேவர்கள்

தம்பிரானே.

பாடல் 665 ( திருவல்லம் )

ராகம் - .; தாளம் -

தனதன தானந் தனதன தானந்

தனதன தானந்

தனதான

நசையொடு தோலுந் தசைதுறு நீரும்

நடுநடு வேயென்

புறுகீலும்

நலமுறு வேயொன் றிடஇரு கால்நன்

றுறநடை யாருங்

குடிலு�டே

விசையுறு காலம் புலனெறி யேவெங்

கனலுயிர் வேழந்

திரியாதே

விழுமடி யார்முன் பழுதற வேள்கந்

தனுமென வோதும்

விறல்தாராய்

இசையுற வேயன் றசைவற ஊதும்

எழிலரி வேழம்

எனையாளென்

றிடர்கொடு மூலந் தொடர்வுட னோதும்

இடமிமை யாமுன்

வருமாயன்

திசைமுக னாருந் திசைபுவி வானுந்

திரிதர வாழுஞ்

சிவன்மூதூர்

தெரிவையர் தாம்வந் தருநட மாடுந்

திருவல மேவும்

பெருமாளே.

பாடல் 666 ( வேலு�ர் )

ராகம் - .; தாளம் -

தனன தாத்தன தானா தானன

தனன தாத்தன தானா தானன

தனன தாத்தன தானா தானன

தந்ததான

அதிக ராய்ப்பொரு ளீவார் நேர்படில்

ரசனை காட்டிக ளீயார் கூடினும்

அகல வோட்டிகள் மாயா ரூபிகள்

நண்புபோலே

அசட ராக்கிகள் மார்மே லேபடு

முலைகள் காட்டிகள் கூசா தேவிழும்

அழகு காட்டிக ளாரோ டாகிலு

மன்புபோலே

சதிர தாய்த்திரி வோயா வேசிகள்

கருணை நோக்கமி லாமா பாவிகள்

தருமு பேட்சைசெய் தோஷா தோஷிகள்

நம்பொணாத

சரச வார்த்தையி னாலே வாதுசெய்

விரக மாக்கி விடர்மு தேவிகள்

தகைமை நீத்துன தாளே சேர்வதும்

எந்தநாளோ

மதுரை நாட்டினி லேவாழ் வாகிய

அருகர் வாக்கினி லேசார் வாகிய

வழுதி மேற்றிரு நீறே பூசிநி ..மிர்ந்துகூனும்

மருவு மாற்றெதிர் வீறே டேறிட

அழகி போற்றிய மாறா லாகிய

மகிமையாற் சமண் வேரோ டேகெட

வென்றகோவே

புதிய மாக்கனி வீழ்தே னு�றல்கள்

பகலி ராத்திரி யோயா ஆலைகள்

புரள மேற்செல வூரூர் பாயஅ

ணைந்துபோதும்

புகழி னாற்கடல் சூழ்பார் மீதினி

லளகை போற்பல வாழ்வால் வீறிய

புலவர் போற்றிய வேலு�ர் மேவிய

தம்பிரானே.

பாடல் 667 ( வேலு�ர் )

ராகம் - ; தாளம் -

தானான தந்த தந்த தானான தந்த தந்த

தானான தந்த தந்த

தனதான

சேலால மொன்று செங்கண் வேலாலும் வென்று மைந்தர்

சீர்வாழ்வு சிந்தை பொன்ற

முதல்நாடித்

தேன்மேவு செஞ்சொ லின்சொல் தானோதி வந்த ணைந்து

தீராத துன்ப இன்ப

முறுமாதர்

கோலாக லங்கள் கண்டு மாலாகி நின்ற னன்பு

கூராமல் மங்கி யங்க

மழியாதே

கோள்கோடி பொன்ற வென்று நாடோ று நின்றி யங்கு

கூர்வாய்மை கொண்டி றைஞ்ச

அருள்தாராய்

மாலாலு ழன்ற ணங்கை யார்மாம தன்க ரும்பின்

வாகோட ழிந்தொ டுங்க

முதல்நாடி

வாழ்வான கந்த முந்த மாறாகி வந்த டர்ந்த

மாசூரர் குன்ற வென்றி

மயிலேறீ

மேலாகு மொன்ற மைந்த மேனாடர் நின்றி ரங்க

வேலாலெ றிந்து குன்றை
மலைவோனே
வேய்போல வுந்தி ரண்ட தோள்மாதர் வந்தி றைஞ்சு
வேலு�ர்வி ளங்க வந்த
பெருமாளே.

பாடல் 668 ( விரிஞ்சிபுரம் )
ராகம் - .; தாளம் -
தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதான
ஒருவரைச் சிறுமனைச் சயனமெத்
தையினில்வைத்
தொருவரைத் தமதலைக் கடையினிற் சுழலவிட்
டொருவரைப் பரபரப் பொடுதெருத் திரியவிட்
டதனாலே
ஒருவருக் கொருவர்சக் களமையிற் சருவவிட்
டுருவுபத் திரமெடுத் தறையின்மற் புரியவிட்
டுயிர்பிழைப் பதுகருத் தளவிலுச் சிதமெனச்
செயுமானார்

தருமயற் ப்ரமைதனிற் றவநெறிக் கயலெனச்

சரியையிற் கிரியையிற் றவமுமற் றெனதுகைத்

தனமவத் தினிலிறைத் தெவருமுற் றிகழ்வுறத்

திரிவேனைச்

சகலதுக் கமுமறச் சகலசற் குணம்வரத்

தரணியிற் புகழ்பெறத் தகைமைபெற் றுனதுபொற்

சரணமெப் பொழுதுநட் பொடுநினைத் திடஅருட்

டருவாயே

குருமொழித் தவமுடைப் புலவரைச்
சிறையில்வைத்

தறவுமுக் கிரம்விளைத் திடுமரக் கரைமுழுக்

கொடியதுர்க் குணஅவத் தரைமுதற் றுரிசறுத்

திடும்வேலா

குயில்மொழிக் கயல்விழித் துகிரிதழ்ச் சிலைநுதற்

சசிமுகத் திளநகைக் கனகுழற் றனகிரிக்

கொடியிடைப் பிடிநடைக் குறமகட் டிருவினைப்

புணர்வோனே

கருதுசட் சமயிகட் கமைவுறக் கிறியுடைப்

பறிதலைச் சமணரைக் குலமுதற் பொடிபடக்

கலகமிட் டுடலுயிர்க் கழுவினுச் சியினில்வைத்

திடுவோனே

கமுகினிற் குலையறக் கதலியிற் கனியுகக்

கழையின்முத் தமுதிரக் கயல்குதித் துலவுநற்

கனவயற் றிகழ்திருக் கரபுரத் தறுமுகப்

பெருமாளே.

பாடல் 669 ( விரிஞ்சிபுரம் )

ராகம் - .; தாளம் -

தனதனன தான தனதனன தான

தனதனன தான

தனதானா

குலையமயி ரோதி குவியவிழி வீறு

குருகினிசை பாடி

முகமீதே

குறுவியர்வு லாவ அமுதினினி தான

குதலையுமொ ராறு

படவேதான்

பலவிதவி நோத முடனுபய பாத

பரிபுரமு மாட

அணைமீதே

பரிவுதரு மாசை விடமனமொ வாத

பதகனையு மாள

நினைவாயே

சிலைமலைய தான பரமர்தரு பால

சிகிபரிய தான

குமரேசா

திருமதுரை மேவு மமணர்குல மான

திருடர்கழு வேற

வருவோனே

கலின்வடிவ மான அகலிகைபெ ணான

கமலபத மாயன்

மருகோனே

கழனிநெடு வாளை கமுகொடிய மோது

கரபுரியில் வீறு

பெருமாளே.

பாடல் 670 ( விரிஞ்சிபுரம் )

ராகம் - மனோலயம் ; தாளம் - அங்கதாளம் (5)

தகிட-1 1/2, தகிட-1 1/2, தகதிமி-2

தனன தந்த தானன தனன தந்த தானன

தனன தந்த தானன

தனதான

நிகரில் பஞ்ச பூதமு நினையு நெஞ்சு மாவியு

நெகிழ வந்து நேர்படு

மவிரோதம்

நிகழ்த ரும்ப்ர பாகர நிரவ யம்ப ராபர

நிருப அங்கு மாரவெ

ளெனவேதம்

சகர சங்க சாகர மெனமு ழங்கு வாதிகள்

சமய பஞ்ச பாதக

ரறியாத

தனிமை கண்ட தானகிண் கிணிய தண்டை
சூழ்வன

சரண புண்ட �ணகம

தருள்வாயே

மகர விம்ப சீகர முகர வங்க வாரிதி

மறுகி வெந்து வாய்விட

நெடுவான

வழிதி றந்து சேனையு மெதிர்ம லைந்த சூரனு

மடிய இந்தி ராதியர்

குடியேறச்

சிகர துங்க மால்வரை தகர வென்றி வேல்விடு

சிறுவ சந்த்ர சேகரர்

பெருவாழ்வே

திசைதொ றும்ப்ர பூபதி திசைமு கன்ப ராவிய

திருவி ரிஞ்சை மேவிய

பெருமாளே.

பாடல் 671 ( விரிஞ்சிபுரம் )

ராகம் - ..; தாளம் -

.

தனன தனதனத் தனன தனதனத்

தனன தனதனத் தனன தனதனத்

தனன தனதனத் தனன தனதனத்

தனதானா

பரவி யுனது பொற் கரமு முகமுமுத்

தணியு முரமுமெய்ப் ப்ரபையு மருமலர்ப்

பதமும் விரவுகுக் குடமு மயிலுமுட்

பரிவாலே

படிய மனதில்வைத் துறுதி சிவமிகுத்

தெவரு மகிழ்வுறத் தரும நெறியின்மெய்ப்

பசியில் வருமவர்க் கசன மொருபிடிப்

படையாதே

சருவி யினியநட் புறவு சொலிமுதற்

பழகு மவரெனப் பதறி யருகினிற்

சரச விதமளித் துரிய பொருள்பறித்

திடுமானார்

தமது மருகமதக் களப புளகிதச்

சயில நிகர்தனத் திணையின் மகிழ்வுறத்

தழுவி யவசமுற் றுருகி மருளெனத்

திரிவேனோ

கரிய நிறமுடைக் கொடிய அசுரரைக்

கெருவ மதமொழித் துடல்கள் துணிபடக்

கழுகு பசிகெடக் கடுகி அயில்விடுத்

திடுதீரா

கமல அயனுமச் சுதனும் வருணனக்

கினியு நமனுக் கரியு லுறையுமெய்க்

கணனு மமரரத் தனையு நிலைபெறப்

புரிவோனே

இரையு முததியிற் கடுவை மிடறமைத்

துழுவை யதளுடுத் தரவு பணிதரித்

திலகு பெறநடிப் பவர்மு னருளுமுத்

தமவேளே

இசையு மருமறைப் பொருள்கள் தினமுரைத்

தவனி தனி லெழிற் கரும முனிவருக்

கினிய கரபுரப் பதியி லறுமுகப்

பெருமாளே.

பாடல் 672 ( விரிஞ்சிபுரம் )

ராகம் - மோஹனம் .

தாளம் - திஸ்ர த்ருவம் - திஸ்ரநடை (10 1/2)

(எடுப்பு - /3/3/3 0)

தனன தந்த தான தனன தந்த தான

தனன தந்த தான

தனதான

மருவு மஞ்சு பூத முரிமை வந்தி டாது

மலமி தென்று போட

அறியாது

மயல்கொ ளிந்த வாழ்வு அமையு மெந்த நாளும்

வகையில் வந்தி ராத

அடியேனும்

உ ருகி யன்பி னோடு உ னைநி னைந்து நாளும்

உ லக மென்று பேச

அறியாத

உ ருவ மொன்றி லாத பருவம் வந்து சேர

உ பய துங்க பாத

மருள்வாயே

அரிவி ரிஞ்சர் தேட அரிய தம்பி ரானும்

அடிப ணிந்து பேசி

கடையூடே

அருளு கென்ற போது பொருளி தென்று காண

அருளு மைந்த ஆதி

குருநாதா

திரியு மும்பர் நீடு கிரிபி ளந்து சூரர்

செருவ டங்க வேலை

விடுவோனே

செயல மைந்த வேத தொனிமு ழங்கு வீதி

திருவி ரிஞ்சை மேவு

பெருமாளே.

பாடல் 673 ( திருவாலங்காடு )

ராகம் - ; தாளம் -

தனதானந் தானன தானன

தனதானந் தானன தானன

தனதானந் தானன தானன

தனதான

கனவாலங் கூர்விழி மாதர்கள்

மனசாலஞ் சால்பழி காரிகள்

கனபோகம் போருக மாமிணை
முலைமீதே
கசிவாருங் கீறுகி ளாலுறு
வசைகாணுங் காளிம வீணிகள்
களிகூரும் பேயமு தூணிடு
கசுமாலர்
மனவேலங் கீலக லாவிகள்
மயமாயங் கீதவி நோதிகள்
மருளாருங் காதலர் மேல்விழு
மகளீர்வில்
மதிமாடம் வானிகழ் வார்மிசை
மகிழ்கூரும் பாழ்மன மாமுன
மலர்பேணுந் தாளுன வேயரு
ளருளாயோ
தனதானந் தானன தானன
எனவேதங் கூறுசொல் மீறளி
ததைசேர்தண் பூமண மாலிகை
யணிமார்பா
தகரேறங் காரச மேவிய
குகவீரம் பாகும ராமிகு
தகைசாலன் பாரடி யார்மகிழ்

பெருவாழ்வே

தினமாமன் பாபுன மேவிய

தனிமானின் தோளுட னாடிய

தினைமாவின் பாவுயர் தேவர்கள்

தலைவாமா

திகழ்வேடங் காளியொ டாடிய

ஜெகதீசங் கேசந டேசுரர்

திருவாலங் காடினில் வீறிய

பெருமாளே.

பாடல் 674 ( திருவாலங்காடு )

ராகம் - ---; தாளம் -

தந்தானந் தாத்தம் தனதன

தந்தானந் தாத்தம் தனதன

தந்தானந் தாத்தம் தனதன

தனதான

பொன்றாமன் றாக்கும் புதல்வரும்

நன்றாமன் றார்க்கின் றுறுதுணை

பொன்றானென் றாட்டம் பெருகிய

புவியூடே

பொங்காவெங் கூற்றம் பொதிதரு

சிங்காரஞ் சேர்த்திங் குயரிய

புன்கூடொன் றாய்க்கொண் டுறைதரு

முயிர்கோல

நின்றானின் றேத்தும் படிநினை

வுந்தானும் போச்சென் றுயர்வற

நிந்தாகும் பேச்சென் பதுபட

நிகழாமுன்

நெஞ்சாலஞ் சாற்பொங் கியவினை

விஞ்சாதென் பாற்சென் றகலிட

நின்தாள்தந் தாட்கொண் டருள்தர

நினைவாயே

குன்றால்விண் டாழ்க்குங் குடைகொடு

கன்றாமுன் காத்துங் குவலய

முண்டார்கொண் டாட்டம் பெருகிய

மருகோனே

கொந்தார்பைந் தார்த்திண் குயகுற

மின்தாள்சிந் தாச்சிந் தையில்மயல்

கொண்டேசென் றாட்கொண் டருளென

மொழிவோனே

அன்றாலங் காட்டண் டருமுய

நின்றாடுங் கூத்தன் திருவருள்

அங்காகும் பாட்டின் பயனினை

யருள்வாழ்வே

அன்பால்நின் தாட்கும் பிடுபவர்

தம்பாவந் தீர்த்தம் புவியிடை

அஞ்சாநெஞ் சாக்கந் தரவல

பெருமாளே.

பாடல் 675 ( திருவாலங்காடு )

ராகம் - ; தாளம் -

தனதன தானந் தாத்த தனதன தானந் தாத்த

தனதன தானந் தாத்த

தனதான

புவிபுனல் காலுங் காட்டி சிகியொடு வானுஞ்
சேர்த்தி

புதுமன மானும் பூட்டி

யிடையூடே

பொறிபுல னீரைந் தாக்கி கருவிகள் நாலுங் காட்டி

புகல்வழி நாலைந் தாக்கி

வருகாயம்

பவவினை நூறுங் காட்டி சுவமதி தானுஞ் சூட்டி

பசுபதி பாசங் காட்டி

புலமாயப்

படிமிசை போவென் றோட்டி அடிமையை நீவந் தேத்தி

பரகதி தானுங் காட்டி

யருள்வாயே

சிவமய ஞானங் கேட்க தவமுநி வோரும் பார்க்க

திருநட மாடுங் கூத்தர்

மருகோனே

திருவளர் மார்பன் போற்ற திசைமுக னாளும் போற்ற

ஜெகமொடு வானங் காக்க

மயிலேறிக்

குவடொடு சூரன் தோற்க எழுகடல் சூதந் தாக்கி

குதர்வடி வேலங் கோட்டு

குமரேசா

குவலயம் யாவும் போற்ற பழனையி லாலங் காட்டில்

குறமகள் பாதம் போற்று

பெருமாளே.

பாடல் 676 ( திருவாலங்காடு )

ராகம் - : தாளம் -

தனதன தானந் தாத்த தனதன தானந் தாத்த

தனதன தானந் தாத்த

தனதான

வடிவது நீலங் காட்டி முடிவுள காலன் கூட்டி

வரவிடு தூதன் கோட்டி

விடுபாசம்

மகனொடு மாமன் பாட்டி முதலுற வோருங் கேட்டு

மதிகெட மாயந் தீட்டி

யுயிர்போமுன்

படிமிசை தாளுங் காட்டி யுடலுறு நோய்பண் டேற்ற

பழவினை பாவந் தீர்த்து

னடியேனைப்

பரிவொடு நாளுங் காத்து விரிதமி ழாலங் கூர்த்த

பரபுகழ் பாடென் றாட்கொ

டருள்வாயே

முடிமிசை சோமன் சூட்டி வடிவுள ஆலங் காட்டில்

முதிர்நட மாடுங் கூத்தர்

புதல்வோனே

முருகவிழ் தாருஞ் சூட்டி யொருதனி வேழங் கூட்டி

முதல்மற மானின் சேர்க்கை

மயல்கூர்வாய்

இடியென வேகங் காட்டி நெடிதரு சூலந் தீட்டி

யெதிர்பொரு சூரன் தாக்க

வரஏகி

இலகிய வேல்கொண் டார்த்து உ டலிரு கூறன்
றாக்கி

யிமையவ ரேதந் தீர்த்த

பெருமாளே.

பாடல் 677 ( திருவாலங்காடு )

ராகம் - மோஹனம்

தாளம் - சதுஸ்ர ரூபகம் (6)

தனனாத் தானன தானம் தனனாத் தானன தானம்

தனனாத் தானன தானம்

தனதான

தவர்வாட் டோமர சூலந் தரியாக் காதிய சூருந்

தணியாச் சாகர மேழுங்

கிரியேழுஞ்

சருகாக் காய்கதிர் வேலும் பொருகாற் சேவலு நீலந்

தரிகூத் தாடிய மாவுந்

தினைகாவல்

துவர்வாய்க் கானவர் மானுஞ் சுரநாட் டாளொரு தேனுந்

துணையாத் தாழ்வற வாழும்

பெரியோனே

துணையாய்க் காவல்செய் வாயென் றுணராப் பாவிகள் பாலுந்

தொலையாப் பாடலை யானும்

புகல்வேனோ

பவமாய்த் தாணது வாகும் பனைகாய்த் தேமண நாறும்

பழமாய்ப் பார்மிசை வீழும்

படிவேதம்

படியாப் பாதகர் பாயன் றியுடாப் பேதைகள் கேசம்

பறிகோப் பாளிகள் யாருங்

கழுவேறச்

சிவமாய்த் தேனமுதூறுந் திருவாக் காலொளி சேர்வெண்

டிருநீற் றாலம ராடுஞ்

சிறியோனே

செழுநீர்ச் சேய்நதி யாரங் கொழியாக் கோமளம் வீசுந்

திருவோத் தூர்தனில் மேவும்

பெருமாளே.

பாடல் 678 ( பாக்கம் )

ராகம் - ; தாளம் -

தாத்தத்த தானதன தாத்தத்த தானதன

தாத்தத்த தானதன

தனதான

கார்க்கொத்த மேனிகடல் போற்சுற்ற மானவழி

காய்த்தொட்டொ ணாதவுரு

ஒருகோடி

காக்கைக்கு நாய்கழுகு பேய்க்கக்க மானவுடல்

காட்டத்தி னீளெரியி

லுறவானிற்

கூர்ப்பித்த சூலனத னாற்குத்தி யாவிகொடு

போத்துக்க மானகுறை

யுடையேனைக்

கூப்பிட்டு சாவருளி வாக்கிட்டு நாமமொழி

கோக்கைக்கு நூலறிவு

தருவாயே

போர்க்கெய்த்தி டாமறலி போற்குத்தி மேவசுரர்

போய்த்திக்கெ லாமடிய

வடிவேலாற்

பூச்சித்தர் தேவர்மழை போற்றுர்க்க வேபொருது

போற்றிச்செய் வார்சிறையை

விடுவோனே

பார்க்கொற்ற நீறுபுனை வார்க்கொக்க ஞானபர

னாய்ப்பத்தி கூர்மொழிகள்

பகர்வாழ்வே

பாக்கொத்தி னாலியலர் நோக்கைக்கு
வேல்கொடுயர்

பாக்கத்தில் மேவவல

பெருமாளே.

பாடல் 679 ( பாக்கம் )

ராகம் - ; தாளம் -

தாத்தத் தனந்த தந்த தாத்தத் தனந்த தந்த

தாத்தத் தனந்த தந்த

தனதான

பாற்றுக் கணங்கள் தின்று தேக்கிட் டிடுங்கு ரம்பை

நோக்கிச் சுமந்து கொண்டு

பதிதோறும்

பார்த்துத் திரிந்து ழன்று ஆக்கத் தையுந்தெ ரிந்து

ஏக்கற்று நின்று நின்று

தளராதே

வேற்றுப் புலன்க ளைந்து மோட்டிப் புகழ்ந்து கொண்டு

வீட்டிற் புகுந்தி ருந்து

மகிழ்வேனோ

மாற்றற்ற பொன்து லங்கு வாட்சக்கி ரந்தெ ரிந்து

வாய்ப்புற்ற மைந்த சங்கு

தடிசாப

மாற்பொற்க லந்து லங்க நாட்டச்சு தன்ப ணிந்து

வார்க்கைத்த லங்க ளென்று

திரைமோதும்

பாற்சொற்ற டம்பு குந்து வேற்கட்சி னம்பொ ருந்து

பாய்க்குட் டுயின்ற வன்றன்

மருகோனே

பாக்குக் கரும்பை கெண்டை தாக்கித் தடம் படிந்த

பாக்கத் தமர்ந்தி ருந்த

பெருமாளே.

பாடல் 680 ( திருவேற்காடு )

ராகம் - .; தாளம் -

தானந்தா தனதான தானந்தா தனதான

தானந்தா தனதான

தனதான

ஆலம்போ லெழுநீல மேலங்காய் வரிகோல

மாளம்போர் செயுமாய

விழியாலே

ஆரம்பால் தொடைசால ஆலுங்கோ புரவார

ஆடம்பார் குவிநேய

முலையாலே

சாலந்தாழ் வுறுமால ஏலங்கோர் பிடியாய

வேளங்கார் துடிநீப

இடையாலே

சாரஞ்சார் விலனாய நேகங்கா யமன்மீறு

காலந்தா னொழிவேது

உ ரையாயோ

பாலம்பால் மணநாறு காலங்கே யிறிலாத

மாதம்பா தருசேய

வயலு¡ரா

பாடம்பார் திரிசூல நீடந்தா கரவீர

பாசந்தா திருமாலின்

மருகோனே

வேலம்பார் குறமாது மேலும்பார் தருமாதும்

வீறங்கே யிருபாலு

முறவீறு

வேதந்தா வபிராம நாதந்தா வருள்பாவு

வேலங்கா டுறைசீல

பெருமாளே.

பாடல் 681 ( திருவேற்காடு )

ராகம் - ஸிம்மேந்திர மத்யமம்

தாளம் - திஸ்ர த்ருபுடை

தாத்தாதன தானன தானன

தாத்தாதன தானன தானன

தாத்தாதன தானன தானன

தனதான

கார்ச்சார்குழ லார்விழி யாரயி

லார்ப்பால்மொழி யாரிடை நூலெழு

வார்ச்சாரிள நீர்முலை மாதர்கள்

மயலாலே

காழ்க்காதல தாமன மேமிக

வார்க்காமுக னாயுறு சாதக

மாப்பாதக னாமடி யேனைநி

னருளாலே

பார்ப்பாயலை யோவடி யாரொடு

சேர்ப்பாயலை யோவுன தாரருள்

கூர்ப்பாயலை யோவுமை யாள்தரு

குமரேசா

பார்ப்பாவல ரோதுசொ லால்முது

நீர்ப்பாரினில் மீறிய கீரரை

யார்ப்பாயுன தாமரு ளாலொர்சொ

லருள்வாயே

வார்ப்பேரரு ளேபொழி காரண

நேர்ப்பாவச காரண மாமத

ஏற்பாடிக ளேயழி வேயுற

அறைகோப

வாக்காசிவ மாமத மேமிக

வூக்காதிப யோகம தேயுறு

மாத்தாசிவ பாலகு காவடி

யர்கள்வாழ்வே

வேர்காடவல் வேடர்கள் மாமக

ளார்க்கார்வநன் மாமகி ணாதிரு

வேற்காடுறை வேதபு ¡£சுரர்

தருசேயே

செயும்வேலா

சித்தர்சித் தத்துறப் பற்றிமெத் தப்புகழ்ச்

செப்புமுத் தித்தமிழ்ப்

பெருமாளே.

பாடல் 1261 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தானன தான தாத்த தானன தான தாத்த

தானன தான தாத்த

தனதான

பாதக மான யாக்கை வாதுசெய் பாவி கோத்த

பாணமும் வாளு மேற்ற

. ; ருபார்வை

பாரப டிர மாப்ப யோதர மாதர் வாய்த்த

பாயலின் மீத ணாப்பி

யிதமாடுந்

தோதக மாய வார்த்தை போதக மாக நோக்கு

தூய்மையில் நாயி னேற்கும்

வினைதீரச்

சூழும னாதி நீத்த யானொடு தானி லாச்சு

கோதய ஞான வார்த்தை

யருள்வாயே

சாதன வேத நூற்பு ராதன பூண நூற்ப்ர

ஜாபதி யாண்மை தோற்க

வரைசாடிச்

சாகர சூர வேட்டை யாடிய வீர வேற்ப்ர

தாபம கீப போற்றி

யெனநேமி

மாதவன் மாது பூத்த பாகர னேக நாட்ட

வாசவ னோதி மீட்க

மறைநீப

மாமலர் தூவி வாழ்த்த யானையை மாலை சூட்டி

வானவர் சேனை காத்த

பெருமாளே.

பாடல் 1262 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தான தனந்தன தான தனந்தன

தான தனந்தன

தனதான

பார நறுங்குழல் சோர நெகிழ்ந்துப

டீர தனம்புள

கிதமாகப்

பாவைய ருந்தியல் மூழ்கி நெடும்பரி

தாப முடன்பரி

மளவாயின்

ஆரமு துண்டணை மீதி லிருந்தநு

ராகம் விளைந்திட

விளையாடி

ஆக நகம்பட ஆர முயங்கிய

ஆசை மறந்துனை

யுணர்வேனோ

நாரத னன்றுச காய மொழிந்திட

நாயகி பைம்புன

மதுதேடி

நாண மழிந்துரு மாறிய வஞ்சக

நாடியெ பங்கய

பதநோவ

மார சரம்பட மோக முடன்குற

வாணர் குறிஞ்சியின்

மிசையேபோய்

மாமுறி வன்புணர் மானுத வுந்தனி

மானை மணஞ்செய்த

பெருமாளே.

பாடல் 1263 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தனதன தனதன தனதன தனதன

தானத் தனந்தம்

தனதான

பிரமனும் விரகொடு பிணிவினை யிடர்கொடு

பேணிக் கரங்கொண்

டிருகாலும்

பெறநிமிர் குடிலென வுறவுயிர் புகமதி

பேதித் தளந்தம்

புவியூடே

வரவிட வருமுட லெரியிடை புகுதரு

வாதைத் தரங்கம்

பிறவாமுன்

மரகத மயில்மிசை வருமுரு கனுமென

வாழ்க்கைக் கொரன்புந்

தருவாயே

அருவரை தொளைபட அலைகடல் சுவறிட

ஆலிப் புடன்சென்

றசுரேசர்

அனைவரு மடிவுற அமர்பொரு தழகுட

னாண்மைத் தனங்கொண்

டெழும்வேலா

இருவினை யகலிட எழிலுமை யிடமுடை

யீசர்க் கிடுஞ்செந்

தமிழ்வாயா

இயல்பல கலைகொடு இசைமொழி பவரினும்

ஏழைக் கிரங்கும்

பெருமாளே.

பாடல் 1264 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தானன தானன தந்த தானன தானன தந்த

தானன தானன தந்த

தனதான

பூதக லாதிகள் கொண்டு யோகமு மாகம கிழ்ந்து

பூசைகள் யாதுநி கழ்ந்து

பிழைகோடி

போம்வழி யேதுதெ ரிந்து ஆதிய நாதியி ரண்டு

பூரணி காரணி விந்து

வெளியான

நாதப ராபர மென்ற யோகியு லாசம றிந்து

ஞானசு வாச முணர்ந்து

வொளிகாண

நாடியொ ராயிரம் வந்த தாமரை மீதில மர்ந்த

நாயகர் பாதமி ரண்டு

மடைவேனோ

மாதுசர் வேஸ்வரிவஞ்சி காளிபி டாரிவி பஞ்சி

வாணிவ ராகிம டந்தை

யபிராமி

வாழ்சிவ காம சவுந்த்ரியாலமெ லாமுக பஞ்ச

வாலைபு ராரியி டந்த

குமையாயி

வேதபு ராணம்வி ளம்பி நீலமு ராரியர் தங்கை

மேலொடு கீழுல கங்கள்

தருபேதை

வேடமெ லாமுக சங்க பாடலொ டாடல்ப யின்ற

வேணியர் நாயகி தந்த

பெருமாளே.

பாடல் 1265 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - கரஹரப்ரியா

தாளம் - ஆதி - கண்டநடை (20)

(எடுப்பு - அதீதம்)

தனந்தா தனந்தா தனந்தா தனந்தா

தனந்தா தனந்த

தனதான

பெருங்கா ரியம்போல் வருங்கே டுடம்பால்

ப்ரியங்கூர வந்து

கருவூறிப்

பிறந்தார் கிடந்தா ரிருந்தார் தவழ்ந்தார்

நடந்தார் தளர்ந்து

பிணமானார்

அருங்கான் மருங்கே யெடுங்கோள் சுடுங்கோள்

அலங்கார நன்றி

தேன்முழ்கி

அகன்றா சையும்போய் விழும்பா ழுடம்பால்

அலந்தேனை யஞ்ச

லெனவேணும்

இருங்கா னகம்போ யிளங்கா ளைபின்போ

கவெங்கே மடந்தை

யெனவேகி

எழுந்தே குரங்கா லிலங்கா புரந்தீ

யிடுங்கா வலன்றன்

மருகோனே

பொருங்கார் முகம்பா ணிகொண்டே யிறைஞ்சார்

புறஞ்சாய அம்பு

தொடும்வேடர்

புனங்கா வலங்கோ தைபங்கா வபங்கா

புகழ்ந்தோது மண்டர்

பெருமாளே.

பாடல் 1266 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தத்தத் தனத்தத்த தத்தத் தனத்தத்த

தத்தத் தனத்தத்த

தனதான

மக்கட் பிறப்புக்கு ளொக்கப் பிறப்புற்ற

மட்டுற்ற சுற்றத்தர்

மனையாளும்

மத்யத் தலத்துற்று நித்தப் பிணக்கிட்டு

வைத்துப் பொருட்பற்று

மிகநாட

நிக்ரித் திடுத்துட்டன் மட்டித் துயிர்பற்ற

நெட்டைக் கயிற்றிட்டு

வளையாமுன்

நெக்குக் குருப்பத்தி மிக்குக் கழற்செப்ப

நிற்றத் துவச்சொற்க

ளருள்வாயே

திக்கப் புறத்துக்குள் நிற்கப் புகழ்ப்பித்த

சித்ரத் தமிழ்க்கொற்ற

முடையோனே

சிப்பக் குடிற்கட்டு மற்பக் குறத்திச்சொல்

தித்திப்பை யிச்சிக்கு

மணவாளா

முக்கட் சடைச்சித்த ருட்புக் கிருக்கைக்கு

முத்தித் துவக்குற்று

மொழிவோனே

முட்டச் சினத்திட்டு முற்பட் டிணர்க்கொக்கை

முட்டித் தொளைத்திட்ட

பெருமாளே.

பாடல் 1267 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தத்தனா தத்ததன தத்தனா தத்ததன

தத்தனா தத்ததன

தனதான

மக்கள்தா யர்க்குமரு கர்க்குமா மர்க்குமனை

விக்கும்வாழ் நர்க்குமிக

மனதூடே

மைத்தவே லைக்குநெடி துற்றமா யத்துயரம்

வைத்துவா டச்சமனு

முறமேவித்

திக்குநா டிக்கரிய மெய்க்கடா விற்றிருகி

திக்கஆ விக்களவு

தெரியாமுன்

சித்தமோ வித்துயிலு மற்றுவா ழச்சிறிது

சித்ரபா தக்கமல

மருள்வாயே

இக்குவே ளைக்கருக முக்கணா டிக்கனலை

யிட்டுயோ கத்தமரு

மிறையோர்முன்

எச்சரா திக்குமுற நிற்குமா யற்குமுத

லெட்டொணா வித்தைதனை

யினிதீவாய்

பக்கஆூர் வத்துடனுள் நெக்குநா டிப்பரவு

பத்தர்பா டற்குருகு

முருகோனே

பக்கம் யானைத்திருவொ டொக்கவா ழக்குறவர்

பச்சைமா னுக்கினிய

பெருமாளே.

பாடல் 1268 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தனனத் தனதன தனனத் தனதன

தனனத் தனதன

தனதான

மதனிக் கதுகொடு பதுமப் புதுமலர்

மலையப் படவிடு

வலியாலே

வனமுற் றினவளை யினநித் திலமலை

வலையத் துகள்வளை

கடலாலே

விதனப் படுமதி வதனக் கொடியுற

வெருவிப் பரிமள

அணைமீதே

மெலியக் கலைதலை குலையத் தகுமினி

விரையக் குரவலர்

தரவேணும்

புதனைச் சதுமுக விதியச் சுதனெதிர்

புனைவித் தவர்தொழு

கழல்வீரா

பொருகைச் சரிவரிபெருகச் செறிவுறு

புனமெய்க் குறமகள்

மணவாளா

முதுநற் சரவண மதனிற் சததள

முளரிப் பதிதனி

லுறைவோனே

முதுமைக் கடலட ரசுரப் படைகெட

முடுகிப் பொரவல

பெருமாளே.

பாடல் 1269 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - தன்யாஸி

தாளம் - அங்கதாளம் (5 1/2)

தகதகிட-2 1/2, தகிட-1 1/2, தகிட-1 1/2

தனதன தனான தான தனதன தனான தான

தனதன தனான தான

தனதான

மதிதனை யிலாத பாவி குருநெற யிலாத கோபி

மனநிலை நிலாத பேயன்

அவமாயை

வகையது விடாத பேடி தவநினை விலாத மோடி

வரும்வகை யிதேது காய

மெனநாடும்

விதியிலி பொலாத லோபி சபைதனில் வராத
கோழை

வினையிகல் விடாத கூள

னெனைநீயும்

மிகுபர மதான ஞான நெறிதனை விசார மாக

மிகுமுன  ருப தான

மருள்வாயே

எதிர்வரு முதார சூர னிருபிள வதாக வேலை

யியலொடு கடாவு தீர

குமரேசா

இனியசொல் மறாத சீலர் கருவழி வராமல் நாளும்

இளமையது தானு மாக

நினைவோனே

நதியுட னராவு பூணு பரமர்குரு நாத னான

நடைபெறு க்டுர மான

மயில்வீரா

நகைமுக விநோத ஞான குறமினுட னேகு லாவு

நவமணி யுலாவு மார்ப

பெருமாளே.

பாடல் 1270 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தனந்தாத் தனந்தாத் தனந்தாத் தனந்தாத்

தனந்தாத் தனத்தம்

தனதான

மலந்தோற் சலந்தேற் றெலும்பாற் கலந்தீட்

டிடுங்கூட் டினிற்றங்

கிடுமாய

மயங்காத் தியங்காப் பயங்கோட் டிடுங்காற்

றுடன்போக் குறத்தந்

தையுமாதும்

குலந்தாய்க் குடம்பாற் பிறந்தேற் றிடுங்கோத்

தடங்கூப் பிடத்தம்

புவியாவும்

குலைந்தார்ப் பெழுங்காட் டிலந்தாட் களன்பாற்

குணங்காத் துனைக்கும்

பிடஆளாய்

தலந்தாட் டொடண்டாத் தளைந்தார்க் கிளங்காத்

தடந்தாட் புடைத்தன்

பினர்வாழத்

தருங்கூத் தரும்பார்த் துகந்தேத் திடஞ்சாத்

திரஞ்சாற் றிநிற்கும்

பெருவாழ்வே

அலைந்தாற் றெழுங்கோச் சலந்தீக் கலந்தாட்

டரம்போச் செனக்கன்

றிடும்வேலா

அறங்காத் துறங்காத் திறம்பார்த் திருந்தோர்க்

கயர்ந்தோர்க் களிக்கும்

பெருமாளே.

பாடல் 1271 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தனதான தான தந்த தனதான தான தந்த

தனதான தான தந்த

தனதான

மனநூறு கோடி துன்ப நொடிமீதி லேறி னைந்து

மதனூட லேமு யங்கி

யதீருப

மடமாத ராசை கொண்டு புவிமீதி லேம யங்கி

மதிசீரெ லாம ழிந்து

கொடிதான

விநன்முடி யேதி ரிந்து புவிமீதி லேயு ழன்று

விரகான்மெ யேத ளர்ந்து

விடுநாளில்

விசையான தோகை துங்க மயிலேறி யோடி வந்து

வெளிஞான வீடு தந்து

அருள்வாயே

தினைவேடர் காவல் தங்கு மலைகாடெ லாமு ழன்று

சிறுபேதை கால்ப ணிந்த

குமரேசா

திரையாழி சேது கண்டு பொருராவ ணேசை
வென்ற

திருமால்மு ராரிதங்கை

யருள்பாலா

முனிவோர்கள் தேவ ரும்பர் சிறையாக வேவ
ளைந்த

மதுசூரர் தானை தங்கள்

கிளையோடு

முடிகோடி தூளெ ழுந்து கழுகோடு பாற ருந்த

முனைவேலி னாலெ றிந்த

பெருமாளே.

பாடல் 1272 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தானதன தனத்ததந்த, தானதன தனத்ததந்த

தானதன தனத்ததந்த

தனதான

மாதர்மயல் தனிற்கலந்து காமபனி யெனப்புகுந்து

மாடவிய லெனச்சுழன்று

கருவூறி

மாறிபல வெனச்சுமந்து தேனுகுட மெனத்திரண்டு

மாதமிது வெனத்தளர்ந்து

வெளியாகி

வேதபுவி தனிற்கழன்று ஏனமென வெனத்தவழ்ந்து

வீறுமணி களைப்புனைந்து

நடைமேலாய்

வேணவித மெனத்திரிந்து நாறுபுழு குடற்றிமிர்ந்து

வேசிவலை தனிற்கலந்து

மடிவேனோ

ஆதிசர ணெனக்கயங்கு லாவமுத
லையைக்கிடங்கி

லாரவுடல் தனைப்பிளந்த

அரிநேமி

ஆமைகய லெனச்செயங்கொள் கோலகுற
ளரித்தடங்கை

யானஅர வணைச்சயந்தன்

மருகோனே

சோதியுரு வெனத்திரண்டு கோலஅரு
ணையிற்கலந்த

சோமனணி குடிற்சிலம்ப

னருள்பாலா

தோகைமயி லெனச்சிறந்த ரூபிகுற மகட்கிரங்கி

தோள்களிறு கிடப்புணர்ந்த

பெருமாளே.

பாடல் 1273 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தத்ததன தானனத் தத்ததன தானனத்

தத்ததன தானனத்

தனதான

முத்துமணி யாரமொய்த் திட்டஇரு கோடுமுற்

பட்டகரிபோலுமத்

தனமாதர்

முற்றுமதி யார்முகத் துற்றமுனை வேலுறப்

பட்டுமுகில் போல்மனத்

திருள்மூடிச்

சுத்தமதி போய்வினைத் துட்டனவ னாய்மனத்

துக்கமுற வேமிகச்

சுழலாதே

சொற்கள்பல நாவினிற் றொட்டுனிரு தாடொழச்

சொற்கமல வாழ்வுசற்

றருள்வாயே

கொத்துமுடி யானபத் தற்றுவிழ வேகுறிப்

புற்றஅதி கோபனச்

சுதன்மாயன்

கொற்றமரு காகுறக் கொச்சைமற மாதினுக்

கிச்சைமொழி கூறுநற்

குமரேசா

பத்தியுட னேநினைத் தெத்துமடி யார்வினைப்

பற்றுவிடு மாமறைப்

பொருளானாய்

பத்திவர ஞானசொற் கற்றவர்கள் பாடுநற்

பக்ஷபத தேவர்மெய்ப்

பெருமாளே.

பாடல் 1274 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - பாகேஸ்ரீ

தாளம் - அங்கதாளம் (5 1/2)

தகதிமி-2, தகிட-1 1/2, தகதிமி-2

தனதன தானத் தானன தனதன தானத் தானன

தனதன தானத் தானன

தனதான

முருகம யூரச் சேவக சரவண ஏனற் பூதரி

முகுளப டீரக் கோமள

முலைமீதே

முழுகிய காதற் காமுக பதிபசு பாசத் தீர்வினை

முதியபு ராரிக் கோதிய

குருவேயென்

றுருகியு மாடிப் பாடியு மிருகழல் நாடிச் சூடியு

முணர்வினோ டூடிக் கூடியும்

வழிபாடுற்

றுலகினொ ராசைப் பாடற நிலைபெறு ஞானத்
தாலினி

யுனதடி யாரைச் சேர்வது

மொருநாளே

மருகனெ னாமற் சூழ்கொலை கருதிய மாமப்
பாதகன்

வரவிடு மாயப் பேய்முலை

பருகாமேல்

வருமத யானைக் கோடவை திருகிவி ளாவிற்
காய்கனி

மதுகையில் வீழச் சாடிய

சதமாபுட்

பொருதிரு கோரப் பாரிய மருதிடை போயப்
போதொரு

சகடுதை யாமற் போர்செய்து

விளையாடிப்

பொதுவியர் சேரிக் கேவளர் புயல்மரு காவஜ் ராயுத

புரமதில் மாபுத் தேளிர்கள்

பெருமாளே.

பாடல் 1275 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - பந்து வராளி

தாளம் - ஆதி

தானா தனதன தானா தனதன

தானா தனதன

தனதான

மூலா நிலமதின் மேலே மனதுறு

மோகா டவிசுடர்

தனைநாடி

மோனா நிலைதனை நானா வகையிலு

மோதா நெறிமுறை

முதல்கூறும்

லீலா விதமுன தாலே கதிபெற

நேமா ரகசிய

வுபதேசம்

நநடு ழிதனிலை வாடா மணியொளி

நீதா பலமது

தருவாயே

நாலா ருசியமு தாலே திருமறை

நாலா யதுசெப

மணிமாலை

நாடாய் தவரிடர் கேடா வரிகரி

நாரா யணர்திரு

மருகோனே

சூலா திபர்சிவ ஞானார் யமனுதை

காலார் தரவரு

குருநாதா

தோதீ திகுதிகு தீதீ செகசெக

சோதீ நடமிடு

பெருமாளே.

பாடல் 1276 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தனதனந் தனந்த தனதனந் தனந்த

தனதனந் தனந்த

தனதான

வரிபரந் திரண்டு நயனமுஞ் சிவந்து

வதனமண் டலங்கள்

குறுவேர்வாய்

மணிசிலம் பலம்ப அளகமுங் குலைந்து

வசமழிந் திழிந்து

மயல்கூர

இருதனங் குலுங்க இடைதுவண் டனுங்க

இனியதொண் டையுண்டு

மடவார்தோள்

இதமுடன் புணர்ந்து மதிமயங் கினும்பொ

னிலகுநின் பதங்கள்

மறவேனே

விரிபரந் தியங்கு முததியுங் கலங்க

விடமினும் பிறந்த

தெனவானோர்

வெருவிநெஞ் சமஞ்சி யுரனொடுந் தயங்கி

விரைபதம் பணிந்து

முறையோவென்

றுரைமறந் துணங்க அயில்தொடும் ப்ரசண்ட

உ யர்தலங் குலுங்க

வருதோகை

ஒருபெருஞ் சிகண்டி மயிலமர்ந் திலங்கி

உ லகமும் புரந்த

பெருமாளே.

பாடல் 1277 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தனதன தான தான, தனதன தான தான

தனதன தான தான

தனதான

வரிவிழி பூச லாட இருகுழை யூச லாட

வளர்முலை தானு மாட

வளையாட

மணிவட மாலை யாட முருகவி ழோதி யாட

மதுரமு தூறி வீழ

அநுராகம்

இருவரு மேக போக மொருவர்த மாக மாக

இதமொடு கூடி மாயை

படுபோதும்

இருகர மாறு மாறு மறுமுக நீப மார்பு

மிருகழல் தானு நானு

மறவேனே

திருநட மாடு காளி பயிரவி மோடி சூலி

திரிபுர நீற தாக

அனல்மோதுஞ்

சிவைகயி லாச வாசி மலைமகள் நாரிபாரி

திருமுலை யாயி தாயி

யருள்பாலா

குருபர நாத னாகி யரனொரு காதி லோது

குணநிதி யாசை நேச

முருகோனே

குறமக ளார பார முகிழ்முலை மீது தாது

குலவிய மாலை மேவு

பெருமாளே.

பாடல் 1278 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ஆனந்த பைரவி

தாளம் - சதுஸ்ர மட்யம் - கண்டநடை (25)

தனதனன தனதனன தனதனன தனதனன

தத்தத் தனந்தனம் தத்தத் தனந்தனம்

தந்ததான

விழையுமனி தரையுமுநி வரையுமவ ருயிர் துணிய

வெட்டிப் பிளந்துளம் பிட்டுப் பறிந்திடுஞ்

செங்கண்வேலும்

விரையளக முகிலுமிள நகையும்ருக மதகனவி

சித்ரத் தனங்களுந் தித்தித்த தொண்டையும்

புண்டாணகச்

சுழிமடுவு மிடையுமழ கியமகளிர் தருகலவி

சுட்டித் திரிந்திஙன் தட்டுப் படுங்கொடும்

பங்கவாழ்வுந்

தொலைவில்பிற வியுமகல வொருமவுன பரமசுக

சுத்தப் பெரும்பதஞ் சித்திக்க அன்புடன்

சிந்தியாதோ

எழுதரிய அறுமுகமு மணிநுதலும் வயிரமிடை

யிட்டுச் சமைந்தசெஞ் சுட்டிக் கலன்களுந்

துங்கநீள்பன்

னிருகருணை விழிமலரு மிலகுபதி னிருகுழையும்

ரத்நக் குதம்பையும் பத்மக் கரங்களுஞ்

செம்பொனூலும்

மொழிபுகழு முடைமணியு மரைவடமு மடியிணையு

முத்தச் சதங்கையுஞ் சித்ரச் சிகண்டியுஞ்

செங்கைவேலும்

முழுதுமழ கியகுமர கிரிகுமரியுடனுருகு

முக்கட் சிவன்பெருஞ் சற்புத்ர வும்பர்தந்

தம்பிரானே.

பாடல் 1279 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தானதன தாத்த தானதன தாத்த

தானதன தாத்த

தனதான

வீணையிசை கோட்டி யாலமிட று�ட்டு

வீரமுனை யீட்டி

விழியார்தம்

வேதனையில் நாட்ட மாகியிடர் பாட்டில்

வீழுமயல் தீட்டி

யுழலாதே

ஆணியுள வீட்டை மேவியுள மாட்டை

யாவலுட னீட்டி

யழியாதே

ஆவியுறை கூட்டில் ஞானமறை யூட்டி

யானநிலை காட்டி

யருள்வாயே

கேணியுற வேட்ட ஞானநெறி வேட்டர்

கேள்சுறுதி நாட்டி

லுறைவோனே

கீதவிசை கூட்டி வேதமொழி சூட்டு

கீரரியல் கேட்ட

க்ருபைவேளே

சேணினுயர் காட்டில் வாழுமற வாட்டி

சீதவிரு கோட்டி

லணைவோனே

சீறவுணர் நாட்டி லாரவழல் மூட்டி

தேவர்சிறை மீட்ட

பெருமாளே.

பாடல் 1280 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தானனா தத்ததன தானனா தத்ததன

தானனா தத்ததன

தனதான

வேலைவா ளைக்கொடிய ஆலகா லத்தைமதன்

வீசுபா ணத்தைநிக

ரெனலாகும்

வேதைசா தித்தவிழி மாதரா பத்தில்விளை

யாடிமோ கித்திரியும்

வெருப

கோலகா லத்தைவிட லாகிமா றக்குணவி

காரமோ டத்தெளிய

அரிதான

கூறொணா தற்பரம ஞான்ரு பத்தின்வழி

கூடலா கப்பெருமை

தருவாயே

வாலிமார் பைத்துணிய ஏழ்மரா இற்றுவிழ

வாளிபோ டக்கருது

மநுராமன்

வானுலோ கத்திலம ரேசனோ லிக்கவளை

யூதிமோ கித்துவிழ

அருள்கூரும்

நீலமே னிக்குமரு காவுதா ரத்துவரு

நீசர்வாழ் வைக்களையு

மிளையோனே

நேசமா கக்குறவர் தோகைமா னைப்புணரு

நீபதோ ளொப்பரிய

பெருமாளே.

பாடல் 1281 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - அஸாவேரி

தாளம் - ஆதி

(எடுப்பு - 3/4 இடம்)

தத்ததன தானத்

தனதான

இத்தரணி மீதிற்

பிறவாதே

எத்தரொடு கூடிக்

கலவாதே

முத்தமிழை யோதித்

தளராதே

முத்தியடி யேனுக்

கருள்வாயே

தத்துவமெய்ஞ் ஞானக்

குருநாதா

சத்தசொரு பாபுத்

தமுதோனே

நித்தியக்ரு தாநற்

பெருவாழ்வே

நிர்த்தஜெக ஜோதிப்

பெருமாளே.

பாடல் 1282 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - பூர்வி கல்யாணி

தாளம் - மிஸ்ர ஜம்பை (10)

தந்தந்த தனத்தன தாத்தன

தனதான

என்பந்த வினைத்தொடர் போக்கிவி

சையமாகி

இன்பந்தனை யுற்றும காப்ரிய

மதுவாகி

அன்புந்திய பொற்கிணி பாற்கட

லமுதான

அந்தந்தனி லிச்சைகொ ளாற்பத

மருள்வாயே

முன்புந்தி நினைத்துரு வாற்சிறு

வடிவாகி

முன்திந்தி யெனப்பர தாத்துட

னடமாடித்

தம்பந்த மறத்தவ நோற்பவர்

குறைதீரச்

சம்பந்த னெனத்தமிழ் தேக்கிய

பெருமாளே.

பாடல் 1283 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - நடபைரவி

தாளம் - திஸ்ர ஏகம் (3)

தனத்தத் தானத்

தனதான

கருப்பற் று�றிப்

பிறவாதே

கனக்கப் பாடுற்

றுழலாதே

திருப்பொற் பாதத்

தநுபூதி

சிறக்கப் பாலித்

தருள்வாயே

பரப்பற் றாருக்

குரியோனே

பரத்தப் பாலுக்

கணியோனே

திருக்கைச் சேவற்

கொடியோனே

செகத்திற் சோதிப்

பெருமாளே.

பாடல் 1284 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ஆரபி

தாளம் - சங்கீர்ண த்ருபுடை /9 0 0

(எடுப்பு - 1 அக்ஷரம் தள்ளி)

தனத்த தத்தத் தனத்த தத்தத் தனத்த

தனதான

கருப்பை யிற்சுக் கிலத் துலைத்துற் பவித்து

மறுகாதே

கபட்ட சட்டர்க் கிதத்த சித்ரத் தமிழ்க்க

ளுரையாதே

விருப்ப முற்றுத் துதித்தெ னைப்பற் றெனக்க

ருதுநீயே

வெளிப்ப டப்பற் றிடப்ப டுத்தத் தருக்கி

மகிழ்வோனே

பருப்ப தத்தைத் தொளைத்த சத்திப் படைச்ச

மரவேளே

பணிக்கு லத்தைக் கவர்ப்ப தத்துக் களித்த

மயிலோனே

செருப்பு றத்துச் சினத்தை முற்றப் பரப்பு

மிசையோனே

தினைப்பு னத்துக் குறத்தி யைக்கைப் பிடித்த

பெருமாளே.

பாடல் 1285 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - வாசஸ்பதி

தாளம் - அங்கதாளம் (7 1/2)

தகிடதக-2 1/2, தகதிமி-2, தகதிமிதக-3

தனதனன தானத்

தனதான

கொடியமத வேள்கைக்

கணையாலே

குரைகணெடு நீலக்

கடலாலே

நெடியபுகழ் சோலைக்

குயிலாலே

நிலைமைகெடு மானைத்

தழுவாயே

கடியரவு பூணர்க்

கினியோனே

கலைகள்தெரிமாமெய்ப்

புலவோனே

அடியவர்கள் நேசத்

துறைவேலா

அறுமுகவி நோதப்

பெருமாளே.

பாடல் 1286 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தானான தானதனத்

தனதான

கோடான மேருமலைத்

தனமானார்

கோமாள மாவலைக்

குழலாதே

நாடோ று மேன்மைபடைத்

திடவேதான்

நாயேனை யாளநினைத்

திடொணாதோ

ஈடேற ஞானமுரைத்

தருள்வோனே

ஈராறு தோள்கள்படைத்

திடுவோனே

மாடேறு மீசர்தமக்

கினியோனே

மாதானை யாறுமுகப்

பெருமாளே.

பாடல் 1287 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - சாரங்கா

தாளம் - அங்கதாளம் (8 1/2)

தகிட-1 1/2, தகதிமி-2, தகதிமி-2, தகதிமிதக-3

தனன தத்தன தாத்தன

தனதான

சமய பத்தி வ்ருதாத்தனை

நினையாதே

சரண பத்ம சிவார்ச்சனை

தனைநாடி

அமைய சற்குரு சாத்திர

மொழிநூலால்

அருளெ னக்கினி மேற்றுனை

தருவாயே

உ மைமுலைத்தரு பாற்கொடு

அருள்கூறி

உ ரிய மெய்த்தவ மாக்கிந

லுபதேசத்

தமிழ்த னைக்கரை காட்டிய

திறலோனே

சமண ரைக்கழு வேற்றிய

பெருமாளே.

பாடல் 1288 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தனதன தாத்தனத்

தனதான

சருவிய சாத்திரத்

திரளான

சடுதிக ழாஸ்பதத்

தமையாத

அருமறை யாற்பெறற்

கரிதாய

அனிதய வார்த்தையைப்

பெறுவேனோ

நிருதரை மூக்கறுத்

தெழுபார

நெடுதிரை யார்ப்பெழப்

பொருதோனே

பொருளடி யாற்பெறக்

கவிபாடும்

புலவரு சாத்துணைப்

பெருமாளே.

பாடல் 1289 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தனத்தத் தானன

தனதான

சினத்துச் சீறிய

வழிகாணச்

சிரித்துப் பேசியு

மயல்பூண

கனத்துப் போர்செயு

முலைதோணக்

கலைக்குட் பாதியு

மறைவாக

மனத்துக் காறுதல்

வருமாறு

மலைப்பப் பேணியு

மிகவாய

தனத்தைச் சூறைகொள்

மடவார்தம்

சதிக்குப் போம்வழி

தவிர்வேனோ

தெனத்தத் தாதென

எனவேபண்

திருத்தத் தோடளி

யிசைபாடும்

புனத்துக் காவல்கொள்

குறமாதின்

புணர்ச்சிக் கேயொரு

வழிதேடி

இனத்துக் காவல

ரறியாமல்

இணக்கித் தோகையை

மகிழ்வோயென்

றெனக்குத் தாளிணை

யருள்வாய்சூர்

இறக்கப் போர்செய்த

பெருமாளே.

பாடல் 1290 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தானத் தானன

தந்ததான

தீதுற் றேயெழு

திங்களாலே

தீயைத் தூவிய

தென்றலாலே

போதுற் றாடும

நங்கனாலே

போதப் பேதைந

லங்கலாமோ

வேதத் தோனைமு

னிந்தகோவே

வேடப் பாவைவி

ரும்புமார்பா

ஓதச் சூதமெ

றிந்தவேலா

ஊமைத் தேவர்கள்

தம்பிரானே.

பாடல் 1291 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ஹம்ஸாநந்தி

தாளம் - அங்கதாளம் (7 1/2)

தகிட-1 1/2, தக-1, தகதிமி-2, தகதிமிதக-3

தய்யதன தானத்

தனதான

துள்ளுமத வேள்கைக்

கணையாலே

தொல்லைநெடு நீலக்

கடலாலே

மெள்ளவரு சோலைக்

குயிலாலே

மெய்யுருகு மானைத்

தழுவாயே

தெள்ளுதமிழ் பாடத்

தெளிவோனே

செய்யகும ரேசத்

திறலோனே

வள்ளல்தொழு ஞானக்

கழலோனே

வள்ளிமண வாளப்

பெருமாளே.

பாடல் 1292 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தானதனத்

தனதான

தேனியல்சொற்

கணிமாதர்

சேவைதனைக்

கருதாதே

யானெனதற்

றிடுபோதம்

யானறிதற்

கருள்வாயே

வானவருக்

கரசான

வாசவனுக்

கினியோனே

ஆனைமுகற்

கிளையோனே

ஆறுமுகப்

பெருமாளே.

பாடல் 1293 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தானதன தானனத்

தனதான

நாரியர்க ளாசையைக்

கருதாதே

நானுனிரு பாதபத்

மமுநாட

ஆரமுத மானசர்க்

கரைதேனே

ஆனஅநு பூதியைத்

தருவாயே

காரணம தானவுத்

தமசீலா

கானகுற மாதினைப்

புணர்வோனே

சூரர்கிளை தூளெழப்

பொரும்வேலா

தோகைமயில் வாகனப்

பெருமாளே.

பாடல் 1294 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - கமாஸ்

தாளம் - அங்கதாளம் (6 1/2)

தகதிமி-2, தகிட-1 1/2, தகதிமிதக-3

தான தனத்த

தனதான

நாளு மிகுத்த

கசிவாகி

ஞான நிருத்த

மதைநாடும்

ஏழை தனக்கு

மநுபூதி

ராசி தழைக்க

அருள்வாயே

பூளை யெருக்கு

மதிநாக

பூண ரளித்த

சிறியோனே

வேளை தனக்கு

சிதமாக

வேழ மழைத்த

பெருமாளே.

பாடல் 1295 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - கந்தலவராளி

தாளம் - அங்கதாளம் (8 1/2)

தகிட-1 1/2, தகிட-1 1/2, தக-1, தகிட-1 1/2, தகதிமிதக-3

தத்தனத் தனனதத்த

தனதான

நித்தமுற் றுனைநினைத்து

மிகநாடி

நிட்டைபெற் றியல்கருத்தர்

துணையாக

நத்தியு தமதவத்தி

னெறியாலே

லக்யலக் கணநிருத்த

மருள்வாயே

வெற்றிவிக் ரமவரக்கர்

கிளைமாள

விட்டநத் துகரனுக்கு

மருகோனே

குற்றமற் றவருளத்தி

லுறைவோனே

குக்குடக் கொடிதரித்த

பெருமாளே.

பாடல் 1296 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - சாரங்கா / குறிஞ்சி

தாளம் - அங்கதாளம் (8) கண்டநடை /5 யு 0

லகு - தகதகிட-2 1/2, தகதகிட-2 1/2, தக-1, திமிதக-2

தானந்த தானத்தம்

தனதான

நீலங்கொள் மேகத்தின்

மயில்மீதே

நீவந்த வாழ்வைக்கண்

டதனாலே

மால்கொண்ட பேதைக்குன்

மணநாறும்

மார்தங்கு தாரைத்தந்

தருள்வாயே

வேல்கொண்டு வேலைப்பண்

டெறிவோனே

வீரங்கொள் சூரர்க்குங்

குலகாலா

நாலந்த வேதத்தின்

பொருளோனே

நானென்று மார்தட்டும்

பெருமாளே.

பாடல் 1297 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - கானடா

தாளம் - சதுஸ்ர ஜம்பை (7)

தத்தத் தனான

தனதான

பட்டு படாத

மதனாலும்

பக்கத்து மாதர்

வசையாலும்

சுட்டுச் சுடாத

நிலவாலும்

துக்கத்தி லாழ்வ

தியல்போதான்

தட்டுப் படாத

திறல்வீரா

தர்க்கித்த சூரர்

குலகாலா

மட்டுப் படாத

மயிலோனே

மற்றொப்பி லாத

பெருமாளே.

பாடல் 1298 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ராமப்பரியா

தாளம் - திஸ்ர ஏகம் (3)

தனனத் தத்தன

தனதான

பரவைக் கெத்தனை

விசைதூது

பகரற் குற்றவ

ரெனமாணுன்

மரபுக் குச்சித

ப்ரபுவாக

வரமெத் தத்தர

வருவாயே

கரடக் கற்பக

னிளையோனே

கலைவிற் கட்குற

மகள்கேள்வா

அரனுக் குற்றது

புகல்வோனே

அயனைக் குட்டிய

பெருமாளே.

பாடல் 1299 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - கல்யாணி

தாளம் - அங்கதாளம் (8) கண்டஜம்பை (15யு 0)

தகிட-1 1/2, தக-1, தகிட-1 1/2, தக-1, தகதிமிதக-3

தனதனன தாத்தனத்

தனதான

பிறவியலை யாற்றினிற்

புகுதாதே

பிரகிருதி மார்க்கமுற்

றலையாதே

உ றுதிகுரு வாக்கியப்

பொருளாலே

உ னதுபத காட்சியைத்

தருவாயே

அறுசமய சாத்திரப்

பொருளோனே

அறிவுளறி வார்க்குணக்

கடலோனே

குறுமுனிவ னேத்துமுத்

தமிழோனே

குமரகுரு கார்த்திகைப்

பெருமாளே.

பாடல் 1300 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ஆபோகி

தாளம் - அங்கதாளம் (9)

தகிடதக-2 1/2, தகதமி-2, தகிட-1 1/2, தகதிமிதக-3

தத்தனத் தாத்தத் தாத்த

தனதான

புத்தகத் தேட்டிற் றீட்டி

முடியாது

பொற்புறக் கூட்டிக் காட்டி

யருள்ஞான

வித்தகப் பேற்றைத் தேற்றி

யருளாலே

மெத்தெனக் கூட்டிக் காக்க

நினைவாயே

தத்தைபுக் கோட்டிக் காட்டி

லுறைவாளைச்

சற்கரித் தேத்திக் கீர்த்தி

பெறுவோனே

கைத்தலத் தீக்குப் பார்த்து

நுழையாத

கற்பகத் தோப்புக் காத்த

பெருமாளே.

பாடல் 1301 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தன்ன தனந்தன

தனதான

பொன்னை விரும்பிய

பொதுமாதர்

புன்மை விரும்பியெ

தடுமாறும்

என்னை விரும்பிநி

யொருகால்நின்

எண்ணி விரும்பவு

மருள்வாயே

மின்னை விரும்பிய

சடையாளர்

மெய்யின் விரும்பிய

குருநாதா

அன்னை விரும்பிய

குறமானை

அண்மி விரும்பிய

பெருமாளே.

பாடல் 1302 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ராமப்ரியா

தாளம் - திஸ்ர ஏகம் (3)

தனனத்த தத்த

தனதான

மனைமக்கள் சுற்ற

மெனுமாயா

வலையைக்க டக்க

அறியாதே

வினையிற்செ ருக்கி

யடிநாயேன்

விழலுக்கி றைத்து

விடலாமோ

சுனையைக்க லக்கி

விளையாடு

சொருபக்கு றத்தி

மணவாளா

தினநற்ச ரித்ர

முளதேவர்

சிறைவெட்டிவிட்ட

பெருமாளே.

பாடல் 1303 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - குறிஞ்சி

தாளம் - அங்கதாளம் (8 1/2)

தகதகிட-2 1/2, தகதகிட-2 1/2, தகிட-1 1/2, தகதிமி-2

தானனா தானன

தந்ததான

வாரிமீ தேயெழு

திங்களாலே

மாரவே ளேவிய

அம்பினாலே

பாரெலா மேசிய

பண்பினாலே

பாவியே னாவிம

யங்கலாமோ

சூரனீள் மார்புதொ

ளைந்தவேலா

சோதியே தோகைய

மர்ந்தகோவே

மூரிமால் யானைம

ணந்தமார்பா

மூவர்தே வாதிகள்

தம்பிரானே.

பாடல் 1304 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - பூர்வி கல்யாணி

தாளம் - சதுஸ்ர ரூபகம் - 2 களை (12)

தானத் தத்தத் தத்தன தத்தத்

தனதான

வானப் புக்குப் பற்றும ருத்துக்

கனல்மேவு

மாயத் தெற்றிப் பொய்க்குடி லொக்கப்

பிறவாதே

ஞானச் சித்திச் சித்திர நித்தத்

தமிழாலுன்

நாமத் தைக்கற் றுப்புகழ் கைக்குப்

புரிவாயே

கானக் கொச்சைச் சொற்குற விக்குக்

கடவோனே

காதிக் கொற்றப் பொற்குல வெற்பைப்

பொரும்வேலா

தேனைத் தத்தச் சுற்றிய செச்சைத்

தொடையோனே

தேவச் சொர்க்கச் சக்கிர வர்த்திப்

பெருமாளே.

பாடல் 1305 ( பொதுப்பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தனதன தனதன தனன தனதன

தனதன தனதன தனன தனதன

தந்தத் தனந்தன தந்தத் தனந்தன

தனதான

குருபர சரவண பவசண் முககுக

ஒருபர வயமியல் எயினர் மகள்சுக

மண்டத் தனங்கள்புணர் சண்டத் திரண்டபுஜ

உ ழுவைகள் கரடிகள் கிடிகள் பகடுகள்

இளைகளை நெறுநெறு நெறென உ லவுவி

லங்கற்குறிஞ்சியுறைதொங்கற்கடம்ப

அருள் தருவாயே

அடிபடு முரசு தவில்பட

கந்தக்கை துந்துமித டந்தப்பு டன் சலிகை

கரடிகை யறைபறை திமிலை .. அபிநவ

சங்கொற்றை கொம்புகுழல் வங்கக் கருங்கடல்
கொள்

பிரளய மிதுவென அதிர உ லகர்கள்

அரகர சிவசிவ அபய மபயமெ

னுஞ்சத்த மெங்குமெழ வெஞ்சத்தி கொண்டுபடை

புகவானோர்

வனச மலர்நிகர், செம்பொற் சதங்கையடி
யன்பர்க்கு வந்துதவு

பெருமாளே.

பாடல் 1306 ( க்ஷேத்திரக் கோவை )

ராகம் - யமுனா கல்யாணி

தாளம் - அங்கதாளம் (8)

(எடுப்பு - 1/2 அக்ஷரம் தள்ளி)

தகிட-1 1/2, தகதிமி-2, தகதகிட-2 1/2, தகதிமி-2

தந்த தானன தானான தந்தன

தந்த தானன தானான தந்தன

தந்த தானன தானான தந்தன

தனதான

கும்ப கோணமொ டர்ரூர் சிதம்பரம்

உ ம்பர் வாழ்வுறு சீகாழி நின்றிடு

கொன்றை வேணியர் மாயூர மம்பெறு

சிவகாசி

கொந்து லாவிய ராமே சுரந்தனி

வந்து பூஜைசெய் நால்வேத தந்திரர்

கும்பு கூடிய �வ்ளுர் பரங்கிரி

தனில்வாழ்வே

செம்பு கேசுர மாடானை யின்புறு

செந்தி லேடகம் வாழ்சோலை யங்கிரி

தென்றன் மாகிரிநாடாள வந்தவ

செகநாதஞ்

செங்சோ லேரக மாவா வினன்குடி

குன்று தோறுடன் மூதூர் விரிஞ்சைநல்

செம்பொன் மேனிய சோணாடு வஞ்சியில்

வருதேவே

கம்பை மாவடி மீதேய சுந்தர

கம்பு லாவிய காவேரிசங்கமு

கஞ்சி ராமலை வாழ்தேவ தந்திர

வயலு�ரா

கந்த மேவிய பேர்ருர் நடம்புரி

தென்சி வாயமு மேயா யகம்படு

கண்டி யூர்வரு சாமீக டம்பணி

மணிமார்பா

எம்பி ரானொடு வாதாடு மங்கையர்

உ ம்பர் வாணிபொ னீள்மால் சவுந்தரி

எந்த நாள்தொறு மேர்பாக நின்றுறு

துதியோதும்

இந்தி ராணிதன் மாதோடு நன்குற

மங்கை மானையு மாலாய்ம ணந்துல

கெங்கு மேவிய தேவால யந்தொறு

பெருமாளே.

பாடல் 1307 ( பழமுதிர்சோலை )

ராகம் - ஸிந்துபைரவி / பூர்விகல்யாணி

தாளம் - மிஸ்ரசாபு (3 1/2)

தகதிமி-2, தகிட-1 1/2

தனதன தான தனதன தான தனதன தான

தனதான

அகரமு மாகி யதிபனு மாகி யதிகமு மாகி

அகமாகி

அயனென வாகி அரியென வாகி அரனென வாகி

அவர்மேலாய்

இகரமு மாகி யெவைகளு மாகி யினிமையு மாகி

வருவோனே

இருநில மீதி லெளியனும் வாழ எனதுமு னோடி

வரவேணும்

மகபதி யாகி மருவும் வலாரிமகிழ்களி கூரும்

வடிவோனே

வனமுறை வேட னருளிய பூஜை மகிழ்கதிர் காம

முடையோனே

செககண சேகு தகுதிமி தோதி திமியென ஆடு

மயிலோனே

திருமலி வான பழமுதிர் சோலை மலைமிசை மேவு

பெருமாளே.

பாடல் 1308 ( பழமுதிர்சோலை )

ராகம் - ; தாளம் -

தனதன தான தான தனதன தான தான தனதன
தான தான

தனதான

இலவிதழ் கோதி நேதி மதகலை யார வார
இளநகை யாட ஆடி

மிகவாதுற்

றெதிர்பொரு கோர பார ம்ருகமத கோல கால
இணைமுலை மார்பி லேற

மதராஜன்

கலவியி லோடி நீடு வெகுவித தாக போக கரணப்ர
தாப லீலை

மடமாதர்

கலவியின் மூழ்கி யாழு மிழிதொழி லேனு மீது
கருதிய ஞான போத

மடைவேனோ

கொலைபுரிகாளி சூலி வயரவி நீலி மோடி குலிச
குடாரியாயி

மகமாயி

குமரிவ ராகி மோகி பகவதி யாதி சோதி குணவதி
யால வூணி

யபிராமி

பலிகொள்க பாலி யோகி பரமகல் யாணி லோக
பதிவ்ரதை வேத ஞானி

புதல்வோனே

படையொடு சூரன் மாள முடுகிய சூர தீர பழமுதிர்
சோலை மேவு

பெருமாளே.

பாடல் 1309 ( பழமுதிர்சோலை )

ராகம் - ஹம்ஸத்வனி

தாளம் - அங்கதாளம் (8 1/2)

தகதகிட-2 1/2, தகிட-1 1/2, தகிட-1 1/2, தகதிமிதக-3

தானதன தான தந்த

தனதான

காரணம தாக வந்து

புவிமீதே

காலனணு காதி சைந்து

கதிகாண

நாரணனும் வேதன் முன்பு

தெரியாத

ஞானநட மேபு ரிந்து

வருவாயே

ஆரமுத மான தந்தி

மணவாளா

ஆறுமுக மாறி ரண்டு

விழியோனே

சூரர்கிளை மாள வென்ற

கதிர்வேலா

சோலைமலை மேவி நின்ற

பெருமாளே.

பாடல் 1310 ( பழமுதிர்சோலை )

ராகம் - ஸிம்மேந்திரமத்யமம்

தாளம் - அங்கதாளம் (5 1/2)

தகதகிட-2 1/2, தகிட-1 1/2, தகிட-1 1/2

தானதன தான தந்த தானதன தான தந்த

தானதன தான தந்த

தனதான

சீலமுள தாயர் தந்தை மாதுமனை யான மைந்தர்

சேருபொரு ளாசை நெஞ்சு

தடுமாறித்

தீமையுறு மாயை கொண்டு வாழ்வுசத மாமி
தென்று

தேடினது போக என்று

தெருவூடே

வாலவய தான கொங்கை மேருநுத லான திங்கள்

மாதர்மய லோடு சிந்தை

மெலியாமல்

வாழுமயில் மீது வந்து தாளிணைகள் தாழு
மென்றன்

மாயவினை தீர அன்பு

புரிவாயே

சேலவள நாட னங்கள் ஆரவயல் சூழ மிஞ்சி

சேணிலவு தாவ செம்பொன்

மணிமேடை

சேருமம ரேசர் தங்க ளூரிதென வாழ்வு கந்த

தீரமிகு சூரை வென்ற

திறல்வீரா

ஆலவிட மேவு கண்டர் கோலமுட னீடு மன்று

ளாடல்புரியீசர் தந்தை

களிகூர

ஆனமொழி யேப கர்ந்து சோலைமலை மேவு கந்த

ஆதிமுத லாக வந்த

பெருமாளே.

பாடல் 1311 ( பழமுதிர்சோலை )

ராகம் - ; தாளம் -

தானதன தான தந்த தானதன தான தந்த

தானதன தான தந்த

தனதான

வீரமத னூல்வி ளம்பு போகமட மாதர் தங்கள்

வேல்விழியி னான்ம யங்கி

புவிமீதே

வீசுகையி னாலி தங்கள் பேசுமவர் வாயி தஞ்சொல்

வேலைசெய்து மால்மி குந்து

விரகாகிப்

பாரவச மான வங்க ணீடுபொருள் போன பின்பு

பாதகனு மாகி நின்று

பதையாமல்

பாகம்வர சேர அன்பு நீபமலர் சூடு தண்டை

பாதமலர் நாடி யென்று

பணிவேனோ

புரணம தான திங்கள் சூடுமர னாரிடங்கொள்

பூவையரு ளால்வ ளர்ந்த

முருகோனே

பூவுல கெலாம டங்க வோரடியி னால ளந்த

பூவைவடி வானு கந்த

மருகோனே

சூரர்கிளை யேத டிந்து பாரமுடி யேய ரிந்து

தூள்கள்பட நீறு கண்ட

வடிவேலா

சோலைதனி லேப றந்து லாவுமயி லேறி வந்து

சோலைமலை மேல மர்ந்த

பெருமாளே.

பாடல் 1312 ( பழமுதிர்சோலை )

ராகம் - ; தாளம் -

தானதன தந்த தந்த தானதன தந்த தந்த

தானதன தந்த தந்த

தனதான

வாரண முகங்கி ழிந்து வீழவு மரும்ப லர்ந்து

மால்வரை யசைந்த நங்கன்

முடிசாய

வாளகிரியண்ட ரண்ட கோளமுற நின்றெ ழுந்த

மாதவ மறந்து றந்து

நிலைபேரப்

பூரண குடங்க டிந்து சிதகள பம்பு னைந்து

பூசலை விரும்பு கொங்கை

மடவார்தம்

போக சயனந் தவிர்ந்து னாடக பதம்ப ணிந்து

பூசனைசெய் தொண்ட னென்ப

தொருநாளே

ஆரண முழங்கு கின்ற ஆயிர மடந்த வங்கள்

ஆகுதி யிடங்கள் பொங்கு

நிறைவீதி

ஆயிர முகங்கள் கொண்ட நூபுர மிரங்கு கங்கை

யாரமர வந்த லம்பு

துறைசேரத்

தோரண மலங்கு துங்க கோபுர நெருங்கு கின்ற

சூழ்மணிபொன் மண்ட பங்கள்

ரவிபோலச்

சோதியின் மிகுந்த செம்பொன் மாளிகை
விளங்குகின்ற

சோலைமலை வந்து கந்த

பெருமாளே.

பாடல் 1313 ( பழமுதிர்சோலை )

ராகம் - பீம்பளாஸ்

தாளம் - அங்கதாளம் (9)

தகிட-1 1/2, தகிட-1 1/2, தக-1

தகிட-1 1/2, தக-1, தகிட-1 1/2, தக-1

தான தானதன தத்ததன தத்ததன

தான தானதன தத்ததன தத்ததன

தான தானதன தத்ததன தத்ததன

தந்ததான

ஆசை நாலுசது ரக்கமல முற்றினொளி

வீசி யோடியிரு பக்கமொடு றச்செல்வளி

ஆவல் கூரமண்மு தற்சலச பொற்சபையு

மிந்துவாகை

ஆர மூணுபதி யிற்கொளநி றுத்திவெளி

யாரு சோதிநுறு பத்தினுட னெட்டுஇத

ழாகி யேழுமள விட்டருண விற்பதியின்

விந்துநாத

ஓசை சாலுமொரு சத்தமதி கப்படிக

மோடு கூடியொரு மித்தமுத சித்தியொடு

மோது வேதசர சத்தியடி யுற்றதிரு

நந்தியூடே

ஊமை யேனையொளிர் வித்துனது முத்திபெற

மூல வாசல்வெளி விட்டுனது ரத்திலொளிர்

யோக பேதவகை யெட்டுமிதி லொட்டும்வகை

யின்றுதாராய்

வாசி வாணிகனெ னக்குதிரை விற்றுமகிழ்

வாத வூரனடி மைக்கொளுக்ரு பைக்கடவுள்

மாழை ரூபன்முக மத்திகைவி தத்தருண

செங்கையாளி

வாகு பாதியுறை சத்திகவு ரிக்குதலை

வாயின் மாதுதுகிர் பச்சைவடி விச்சிவையென்

மாசு சேரழுபி றப்பையும றுத்தவுமை

தந்தவாழ்வே

காசி ராமெசுரம் ரத்நகிரிசர்ப்பகிரி

எருர் வேலுர் தெவுர் கச்சிமது ரைப்பறியல்

காவை மூதுரரு ணக்கிரிதி ருத்தணியல்

செந்தில்நாகை

காழி �வ்ளுர்பழ நிக்கிரிகுறுக்கைதிரு

நாவ லு�ர்திருவெ ணெய்ப்பதியின் மிக்கதிகழ்

காதல் சோலைவளர் வெற்பிலுறை முத்தர்புகழ்

தம்பிரானே.

பாடல் 1314 ( பழமுதிர்சோலை )

ராகம் - தேநுக

தாளம் - திஸ்ரத்ரிபுடை

தனனாதன தானன தத்தன

தனனாதன தானன தத்தன

தனனாதன தானன தத்தன

தனதான

கருவாகியெ தாயுத ரத்தினி

லுருவாகவெ கால்கையு றுப்பொடு

கனிவாய்விழி நாசியு டற்செவி

நரைமாதர்

கையிலேவிழ வேகிய ணைத்துயி

லெனவேமிக மீதுது யிற்றிய

கருதாய்முலை யாரமு தத்தினி

லினிதாகித்

தருதாரமு மாகிய சுற்றமு

நலவாழ்வுநி லாதபொ ருட்பதி

சதமாமிது தானென வுற்றுனை

நினையாத

சதுராயுன தாளிணை யைத்தொழ

அறியாதநிர் மூடனை நிற்புகழ்

தனையோதிமெய்ஞ் ஞானமு றச்செய்வ

தொருநாளே

செருவாயெதி ராமசு ரத்திரள்

தநல்முளைக ளோடுநி ணத்தசை

திமிர்தாதுள பூதக ணத்தொடு

வருபேய்கள்

திகுதாவுண வாயுதி ரத்தினை

பலவாய்நரியோடுகு டித்திட

சிலகூகைகள் தாமுந டித்திட

அடுதீரா

அருமாமறை யோர்கள்து தித்திடு

புகர்வாரண மாதுத னைத்திகழ்

அளிசேர்குழல் மேவுகு றத்தியை

அணைவோனே

அழகானபொன் மேடையு யர்த்திடு

முகில்தாவிய சோலைவி யப்புறு

அலையாமலை மேவிய பத்தர்கள்

பெருமாளே.

பாடல் 1315 ( பழமுதிர்சோலை )

ராகம் - ; தாளம் -

தானதத்த தான தனாதனா தன

தானதத்த தான தனாதனா தன

தானதத்த தான தனாதனா தன

தனதானா

சீர்சிறக்கு மேனி பசேல் பசே லென

நூபுரத்தி னோசை கலீர் கலீ ரென

சேரவிட்ட தாள்கள் சிவேல் சிவே லென

வருமானார்

சேகரத்தின் வாலை சிலோர் சிலோர் களு

நூறுலக்ஷ கோடி மயால் மயால் கொடு

தேடியொக்க வாடி யையோ வையோ வென

மடமாதர்

மார்படைத்த கோடு பளீர் பளீ ரென

ஏமலித்தெ னாவி பகீர் பகீ ரென

மாமசக்கி லாசை யுளோ முளோ மென

நினைவோடி

வாடை பற்று வேளை யடா வடா வென

நீமயக்க மேது சொலாய் சொலாயென

வாரம்வைத்த பாத மிதோ இதோ என

அருள்வாயே

பாரதத்தை மேரு வெளீ வெளீ திகழ்

கோடொ டித்த நாளில் வரைஇ வரைஇ பவர்

பானி றக்க ணேசர் குவா குவா கனர்

. ; ளையோனே

பாடல்முக்ய மாது தமீழ் தமீ ழிறை

மாமுநிக்கு காதி லுணார் வுணார் விடு

பாசமற்ற வேத ரு ரு பர

குமரோசா

போர்மிகுத்த சூரன் விடோ ம் விடோ மென

நேரெதிர்க்க வேலை படீர் படீ ரென

போயறுத்த போது குபீர் குபீ ரென

வெகுசோரி

பூமியுக்க வீசு குகா குகா திகழ்

சோலைவெற்பின் மேவு தெய்வா தெய்வா
னைதொள்

பூணியிச்சை யாறு புயா புயா றுள

பெருமாளே.

பாடல் 1316 ( பழமுதிர்சோலை )

ராகம் - சங்கராபரணம்

தாளம் - ஆதி - திஸ்ரநடை (12)

தனன தான தான தத்த

தனன தான தான தத்த

தனன தான தான தத்த

தனதான

துடிகொ ணோய்க ளோடு வற்றி

தருண மேனி கோழை துற்ற

இரும லீளை வாத பித்த

மணுகாமல்

துறைக ளோடு வாழ்வு விட்டு

உ லக நூல்கள் வாதை யற்று

சுகமு ளாநு பூதி பெற்று

மகிழாமே

உ டல்செய் கோர பாழ்வ யிற்றை

நிதமு மூணி னாலு யர்த்தி

யுயிரினீடு யோக சித்தி

பெறலாமே

உ ருவி லாத பாழில் வெட்ட

வெளியி லாடு நாத நிர்த்த

உ னது ஞான பாத பத்ம

முறுவேனோ

கடிது லாவு வாயு பெற்ற

மகனும் வாலி சேயு மிக்க

மலைகள் போட ஆழி கட்டி

யிகலுர்போய்க்

களமு றானை தேர்நு றுக்கி

தலைக ளாறு நாலு பெற்ற

அவனை வாளி யால டத்தன்

மருகோனே

முடுகு வீர சூர பத்மர்

தலையின் மூளை நீறு பட்டு

முடிவ தாக ஆடு நிர்த்த

மயில்வீரா

முநிவர் தேவர் ஞான முற்ற

புநித சோலை மாமலைக்குள்

முருக வேல த்யாகர் பெற்ற

பெருமாளே.

பாடல் 1317 ( பழமுதிர்சோலை )

ராகம் - ; தாளம் -

தானத் தானன தத்தன தத்தன

தானத் தானன தத்தன தத்தன

தானத் தானன தத்தன தத்தன

தனதான

பாசத் தால்விலை கட்டிய பொட்டிகள்

நேசித் தாரவர் சித்தம ருட்டிகள்

பாரப் பூதர மொத்தத னத்திகள்

மிகவேதான்

பாவத் தால்மெயெ டுத்திடு பட்டிகள்

சீவிக் கோதிமு டித்தள கத்திகள்

பார்வைக் கேமயலைத்தரு துட்டிக

ளொழியாத

மாசுற் றேறிய பித்தளை யிற்பணி

நீறிட் டேயொளி பற்றவி ளக்கிகள்

மார்பிற் காதினி லிட்ட பிலுக்கிகள்

அதிமோக

வாய்வித் தாரமு ரைக்கும பத்திகள்

நேசித் தாரையு மெத்திவ டிப்பவர்

மாயைக் கேமனம் வைத்தத னுட்டின

மலைவேனோ

தேசிக் கானக முற்றதி னைப்புன

மேவிக் காவல்க வட்கல்சு ழற்றுவள்

சீதப் பாதகு றப்பெண்ம கிழ்ச்சிகொள்

மணவாளா

தேடிப் பாடிய சொற்புல வர்க்கித

மாகத் தூதுசெ லத்தரில் கற்பக

தேவர்க் காதிதி ருப்புக லிப்பதி

வருவோனே

ஆசித் தார்மன திற்புகு முத்தம

கூடற் கேவைகை யிற்கரை கட்டிட

ஆளொப் பாயுதிர் பிட்டமு துக்கடி

படுவோனோ

டாரத் தோடகி லுற்றத ருக்குல

மேகத் தோடொரு மித்துநெ ருக்கிய

ஆதிச் சோலை மலைப்பதி யிற்றிகழ்

பெருமாளே.

பாடல் 1318 ( பழமுதிர்சோலை )

ராகம் - சக்ரவாஹம் / குந்தலவராளி

தாளம் - ஆதி

(எடுப்பு - 1/2 இடம்)

தானதன தந்த தானதன தந்த

தானதன தந்த

தனதான

வாதினை யடர்ந்த வேல்விழியர் தங்கள்

மாயமதொ ழிந்து

தெளியேனே

மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து

மாபதம ணிந்து

பணியேனே

ஆதியொடு மந்த மாகிய நலங்கள்

ஆறுமுக மென்று

தெரியேனே

ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட

தாடுமயி லென்ப

தறியேனே

நாதமொடு விந்து வானவுடல் கொண்டு

நானிலம லைந்து

திரிவேனே

நாகமணி கின்ற நாதநிலை கண்டு

நாடியதில் நின்று

தொழுகேனே

சோதியுணர் கின்ற வாழ்வுசிவ மென்ற

சோகமது தந்து

எனையாள்வாய்

சூரர்குலம் வென்று வாகையொடு சென்று

சோலைமலை நின்ற

பெருமாளே.

பாடல் 1319 ( பழமுதிர்சோலை )

ராகம் - ; தாளம் -

தானதன தத்த தானதன தத்த

தானதன தத்த

தனதான

வார்குழையை யெட்டி வேளினைம ருட்டி

மாயநம னுக்கு

முறவாகி

மாதவம ழித்து லீலைகள் மிகுத்து

மாவடுவை யொத்த

விழிமாதர்

சீருட னழைத்து வாய்கனிவு வைத்து

தேனித ழளித்து

அநுபோக

சேர்வைதனை யுற்று மோசம்விளை வித்து

சீர்மைகெட வைப்ப

நுறவாமோ

வாரினை யறுத்து மேருவை மறித்து

மாகனக மொத்த

குடமாகி

வாரவணை வைத்து மாலளித முற்று

மாலைகளு மொய்த்த

தனமாது

தோரணி புயத்தி யோகினி சமர்த்தி

தோகையுமை பெற்ற

புதல்வோனே

சூர்கிளை மடித்து வேல்கர மெடுத்து

சோலைமலை யுற்ற

பெருமாளே.

பாடல் 1320 ( பழமுதிர்சோலை )

ராகம் - ; தாளம் -

தனன தனதன தனத்தத் தாத்த

தனன தனதன தனத்தத் தாத்த

தனன தனதன தனத்தத் தாத்த

தனதான

அழகு தவழ்குழல் விரித்துக் காட்டி

விழிகள் கடையிணை புரட்டிக் காட்டி

அணிபொ னணிகுழை புரித்துக் காட்டி

யநுராக

அவச இதமொழி படித்துக் காட்டி

அதர மழிதுவர் வெளுப்பைக் காட்டி

அமர்செய் நகநுதி யழுத்தைக் காட்டி

யணியாரம்

ஒழுகு மிருதன மசைத்துக் காட்டி

எழுத வரியிடை வளைத்துக் காட்டி

உ லவு முடைதனை நெகிழ்த்திக் காட்டி

யுறவாடி

உ ருகு கடிதட மொளித்துக் காட்டி

உ பய பரிபுர பதத்தைக் காட்டி

உ யிரை விலைகொளு மவர்க்குத் தேட்ட

மொழிவேனோ

முழுகு மருமறை முகத்துப் பாட்டி

கொழுநர் குடுமியை யறுத்துப் போட்ட

முதல்வ குகைபடு திருப்பொற் கோட்டு

முனிநாடா

முடுகு முதலையை வரித்துக் கோட்டி

அடியர் தொழமக வழைத்துக் கூட்டி

முறைசெய் தமிழினை விரித்துக் கேட்ட

முதுநீதர்

பழைய கடதட முகத்துக் கோட்டு

வழுவை யுரியணி மறைச்சொற் கூட்டு

பரமர் பகிரதி சடைக்குட் சூட்டு

பரமேசர்

பணிய அருள்சிவ மயத்தைக் காட்டு

குமர குலமலை யுயர்த்திக் காட்டு

பரிவொ டணிமயில் நடத்திக் காட்டு

பெருமாளே.

பாடல் 1321 ( பழமுதிர்சோலை )

ராகம் - யமுனா கல்யாணி (மத்யம ஸ்ருதி)

தாளம் - ஆதி

(எடுப்பு - 1/2 இடம்)

தனதன தத்தத் தனதன தத்தத்

தனதன தத்தத் தனதன தத்தத்

தனதன தத்தத் தனதன தத்தத்

தனதானா

தலைமயிர் கொக்குக் கொக்கந ரைத்துக்

கலகலெ னப்பற் கட்டது விட்டுத்

தளர்நடை பட்டுத் தத்தடி யிட்டுத்

தடுமாறித்

தடிகொடு தத்திக் கக்கல்பெ ருத்திட்

டசனமும் விக்கிச் சத்தியெ டுத்துச்

சளியுமி குத்துப் பித்தமு முற்றிப்

பலகாலும்

திலதயி லத்திட் டொக்கவெ ரிக்கத்

திரிபலை சுக்குத் திப்பிலி யிட்டுத்

தெளியவ டித்துற் றுய்த்துடல் செத்திட்

டுயிர்போமுன்

திகழ்புகழ் கற்றுச் சொற்கள்ப யிற்றித்

திருவடி யைப்பற் றித்தொழு துற்றுச்

செனனம றுக்கைக் குப்பர முத்திக்

கருள்தாராய்

கலணைவி சித்துப் பக்கரை யிட்டுப்

புரவிசெ லுத்திக் கைக்கொடு வெற்பைக்

கடகுந டத்தித் திட்டென எட்டிப்

பொருசூரன்

கனபடை கெட்டுத் தட்டற விட்டுத்

திரைகட லுக்குட் புக்கிட எற்றிக்

களிமயி லைச்சித் ரத்தில்ந டத்திப்

பொருகோவே

குலிசன்ம கட்குத் தப்பியு மற்றக்

குறவர்ம கட்குச் சித்தமும் வைத்துக்

குளிர்தினை மெத்தத் தத்துபு னத்திற்

றிரிவோனே

கொடியபொ ருப்பைக் குத்திமு றித்துச்

சமரம்வி ளைத்துத் தற்பர முற்றுக்

குலகிரியிற்புக் குற்றுரை யுக்ரப்

பெருமாளே.

பாடல் 1322 ( பழமுதிர்சோலை )

ராகம் - ; தாளம் -

தனதன தனந்த தான தனதன தனந்த தான

தனதன தனந்த தான

தனதான

மலரணை ததும்ப மேக குழல்முடி சரிந்து வீழ

மணபரிமளங்கள் வேர்வை

யதனோடே

வழிபட இடங்க ணாட பிறைநுதல் புரண்டு மாழ்க

வனைகலை நெகிழ்ந்து போக

. ; ளநீரின்

முலையிணை ததும்ப நூலின் வகிரிடை சுழன்று

வாட

முகமுகமொ டொன்ற பாய

லதுனூடே

முதுமயல் கலந்து மூழ்கி மகிழ்கினும் அலங்க லாடு

முடிவடிவொ டங்கை வேலு

மறவேனே

சிலைநுத லிளம்பெண் மோகி சடையழகி யெந்தை பாதி

திகழ்மர கதம்பொன் மேனி

யுமைபாலா

சிறுநகை புரிந்து சூரர் கிரிகட லெரிந்து போக

திகழயி லெறிந்த ஞான

முருகோனே

கொலைமிக பயின்ற வேடர் மகள்வளி மணந்த தோள

குணவலர் கடம்ப மாலை

யணிமார்பா

கொடிமின லடைந்த சோதி மழகதிர் தவழ்ந்த ஞான

குலகிரிமகிழ்ந்து மேவு

பெருமாளே.

பாடல் 1323 ( புதிய பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தனதன தான தனதன தான

தனதன தான

தனதான

கருவெனு மாயை உ ருவினில் மூழ்கி

வயதள வாக

நிலமீதில்

கலைதெரிவாணர் கலைபல நூல்கள்

வெகுவித மாக

கவிபாடித்

தெருவழி போகி பொருளெனு மாசை

திரவியம் நாடி

நெடிதோடிச்

சிலைநுதல் மாதர் மயலினில் மூழ்கி

சிறுவித மாக

திரிவேனோ

அருளது போக குருபர னேஉ ன்

அடியவர் வாழ

அருள்வோனே

அரனிரு காதில் அருள்பர ஞாந

அடைவினை ஓதி

அருள்பாலா

வெருவிடு சூரர் குலஅடி வேரை

விழவிடு சாசு

வதிபாலா

மிடலுட லாளர் அடரசுர் மாள

விடுமயில் வேல

பெருமாளே.

பாடல் 1324 ( புதிய பாடல்கள் )

ராகம் - ; தாளம் -

தந்த தனந்த தனத்த தானன

தந்த தனந்த தனத்த தானன

தந்த தனந்த தனத்த தானன

தனதானா

தங்க மிகுந்த முலைக்க டாமலை

பொங்க விரும்பிய முத்து மாலைகள்

தங்க அணிந்து முறுக்கும் வேசியர்

மொழியாலே

சஞ்ச லமிஞ்சி மயக்கி யேஒரு

மஞ்ச மிருந்து சுகிக்க வேவளர்

சந்து சுகந்த முடித்து நூலிடை

கிடையாடக்

கொங்கை குலுங்க வளைத்து வாயத

ரங்க ளருந்தி ருசிக்க வேமத

குங்கு மமிஞ்சு கழுத்தி லேகுயி

லெனஓசை

கொண்ட வரிந்த விதத்தி னாடர

சங்கி லிகொண்டு பிணித்து மாமயில்

கொஞ்சி மகிழ்ந்த வறட்டு வீணியர்

உ றவாமோ

திங்கள் அரும்பு சலத்தி லேவிடம்

வந்த துகண்டு பயப்ப டாதவர்

சிந்தை நடுங்கி இருக்க வேமயில்

மிசையேறிச்

சிங்க முகன்தலை வெட்டி மாமுகன்

அங்க மறுந்து கிடக்க வேவரு

சிம்பு ளெனும்படி விட்ட வேலுள

குருநாதா

மங்கை மடந்தை கதிக்கு நாயகி

சங்கரிசுந்தரிஅத்தி யானனை

மைந்த னெனும்படி பெற்ற ஈசுரி

தருபாலா

மந்திர தந்திர முத்த யோகியர்

அஞ்சலி செங்கை முடிக்க வேஅருள்

வந்து தரும்படி நித்த மாடிய

பெருமாளே.

பாடல் 1325 ( புனவாயில் )

ராகம் - ரஞ்சனி

தாளம் - ஆதி

தனனந் தந்தன தானன தந்தன

தனனந் தந்தன தானன தந்தன

தனனந் தந்தன தானன தந்தன

தனதான

உ ரையுஞ் சென்றது நாவும் உ லர்ந்தது

விழியும் பஞ்சுபொ லானது கண்டயல்

உ ழலுஞ் சிந்துறு பால்கடை நின்றது

கடைவாயால்

ஒழுகுஞ் சஞ்சல மேனிகு ளிர்ந்தது

முறிமுன் கண்டுகை கால்கள்நி மிர்ந்தது

உ டலுந் தொந்தியும் ஓடிவ டிந்தது

பரிகாரி

வரவொன் றும்பலி யாதினி என்றன்பின்

உ றவும் பெண்டிரு மோதிவி ழுந்தழ
மறல்வந் திங்கென தாவிகொ ளுந்தினம்
. ; யல்தோகை
மயிலுஞ் செங்கைக ளாறிரு திண்புய
வரைதுன் றுங்கடி மாலையும் இங்கித
வனமின் குஞ்சரிமாருடன் என்றன்முன்
வருவாயே
அரிமைந் தன்புகழ் மாருதி என்றுள
கவியின் சங்கமி ராகவ புங்கவன்
அறிவுங் கண்டருள் வாயென அன்பொடு
தரவேறுன்
அருளுங் கண்டத ராபதி வன்புறு
விஜயங் கொண்டெழு போதுபு லம்பிய
அகமும் பைந்தொடி சீதமை றைந்திட
வழிதோறும்
மருவுங் குண்டலம் ஆழிசி லம்புகள்
கடகந் தண்டைபொன் நூபுர மஞ்சரி
மணியின் பந்தெறி வாயிது பந்தென
முதலான
மலையுஞ் சங்கிலி போலம ருங்குவிண்
முழுதுங் கண்டந ராயணன் அன்புறு

மருகன் தென்புன வாயில மர்ந்தருள்

பெருமாளே.

பாடல் 1326 (திருவெழுகூற்றிருக்கை)

ராகம் - தர்பாரிகானடா

தாளம் - ஆதி

ஓருரு வாகிய தாரகப் பிரமத்

தொருவகைத் தோற்றத் திருமர பெய்தி

ஒன்றா யொன்றி யிருவரிற் றோன்றி மூவா
தாயினை

இருபிறப் பாளரினொருவ னாயினை

ஓராச் செய்கையி னிருமையின் முன்னாள்

நான்முகன் குடிமி இமைப்பினிற் பெயர்த்து

மூவரும் போந்து இருதாள் வேண்ட

ஒருசிறை விடுத்தனை

ஒருநொடி யதனில் இருசிறை மயிலின்

முந்நீ ருடுத்த நானிலம் அஞ்ச நீவலஞ் செய்தனை

நால்வகை மருப்பின் மும்மதத் திருசெவி

ஒருகைப் பொருப்பன் மகளை வேட்டனை

ஒருவகை வடிவினி லிருவகைத் தாகிய

மும்மதன் தனக்கு மூத்தோ னாகி

நால்வாய் முகத்தோன் ஐந்துகைக் கடவுள்

அறுகு சூடிக் கிளையோ னாயினை

ஐந்தெழுத் ததனில் நான்மறை யுணர்த்து

முக்கட் சுடரினை இருவினை முருந்துக்

கொருகுரு வாயினை

ஒருநாள் உ மையிரு முலைப்பா லருந்தி

முத்தமிழ் விரகன் நாற்கவி ராஜன்

ஐம்புலக் கிழவன் அறுமுக னிவனென

எழில்தரு மழகுடன் கழுமலத் துதித்தனை

அறுமீன் பயந்தனை ஐந்தரு வேந்தன்

நான்மறைத் தோற்றத்து முத்தலைச் செஞ்சூட்

டன்றி லங்கிரியிருபிள வாக ஒருவேல் விடுத்தனை

காவிரிவடகரை மேவிய குருகிரிஇருந்த

ஆறெழுத் தந்தணர் அடியிணை போற்ற

ஏரகத் திறைவ னென இருந்தனையே.

திருப்புகழ் 1337 காதின்மணி ஓலை (பொதுப்பாடல்கள்)

காதின்மணி ஓலையிட்டு

வருமானார்

காமவலை யூடுபுக்கு

மதிமாழ்கி

நீதிநெறி யேவிடுத்து

அலையாதே

நீயுன்இரு தாள்அளிக்க

வரவேணும்

ஆதிமக மாயிபெற்ற

குமரேசா

ஆறுமுக மேபடைத்த

குருநாதா

தீதில்அடி யார்மனத்தில்

உறைவோனே

தேவர்குடி வாழவைத்த

பெருமாளே.

திருப்புகழ் 1338 சிவனிதா வியமனது (பழநி)

தனனதா தனதனன தனனதா தனதனன

தனனதா தனதனன

தனதான

சிவனிதா வியமனதும் அழகுமா ணடைமதன

சிலைஉலா வியபுருவம்

விழிசேல்கள்

திகழுமா மதிமுகமும் இருளுலா வியகுழல்கள்

திருவினோ வியகனக

தனபாரம்

தவளவா ணகையுமினின் இடையுலா வியநடையர்

சரசமா மயில்கள்ளன

இளையோர்கள்

தமிழின்மோ கினிஎனவே சொலியுமே
பணியுமொரு

சரசமோ இனியுதற

அருள்வாயே

புவனிகா டடையதுயில் பரமர்நா டடையசடை

புகழெலா மடையநகை

ஒளிமீதே

பொடிகளால் மருவஇள வெயிலுலா வியகழல்கள்

பொலியவே மழுவுழையும்

உடனாட

பவுரிநா டகமருளும் எனதுதா யிடமருவு

பரமரா சியனருளு

முருகோனே

பழநிமா மலைமருவும் எனதுமோ கினியமளி

பழகிநா யெனைமருவு

பெருமாளே.



Map of Murugan Temples
Sung by Arunagirinathar in Tirupugazh
---(Click each point to read abt that thalam/tirupugazh)---
அருணகிரி திருப்புகழ் பாடி அருளிய
முருகன் தலங்கள்
http://madhavipanthal.blogspot.com/arunagirithalam.html
ANDHRA PRADESH
KARNATAKA
KERALA
Puzhal Lake
THIRUTHANI
Javadi Hills
Elagiri
Stanley
Sattanur
Gingee Hills
Kalrayan Hills
Chitteri Hills
Nilgiri Hills
Kunda Hills
Makurti Lake
Malampuzha
Lower Cauvery Plain
Kollaimalai
Anaimalai
Pachchaimalai
Andippati Hills
Kambam Valley
Upper Vaigai Valley
Palani Hills
Lower Vaigai Plain
SWAMI MALAI
THIRUPARANGKUNDRAM
TIRUCHENDUR
Agastya Malai
Kodayar Lake
Bay of Bengal
Palk Strait
Gulf of Mannar
SRI LANKA
INDIAN OCEAN
Kathirgamam 164
Map not to Scale
Physical Altitude Scale
1800m
1350
900
600
300
150
0 sea level
75
300 m
m=metres

# அருணகிரிநாதர் தரிசித்த தலங்கள்

1. திருவாழ்மாமலை (திருவண்ணாமலை)
2. சோமநாதன்மடம்
3. ஒடுக்கத்துச் செரிவாய்
4. வேலூர்
5. விரிஞ்சிபுரம்
6. திருவல்லம்
7. வள்ளிமலை
8. வெள்ளிக்கரம்
9. முல்வாய்
10. பழையனூர்
11. திருத்தணி
12. காமத்தூர்
13. திருவாதூர்
14. வாகை
15. தேவனூர்
16. காஞ்சிபுரம்
(குமரக்கோட்டம், காமக்கோட்டம்
& கஞ்சிக்கோட்டம்)
17. பாக்கம்
18. திருவலிதயம் (Padi)
19. திருமுல்லைவாயல்
20. திருவேற்காடு
21. திருவொற்றியூர்
22. மைலாப்பூர்
23. திருவான்மியூர்
24. மடப்பாக்கம்
25. வல்லக்கோட்டை
26. திருக்கச்சூர்
27. இறையனார்-வேலூர்
28. திருப்போரூர்
29. உத்ரமேரூர்
30. திருக்கழுக்குன்றம்
31. மதுராந்தகம்
32. இன்டம்பாலம்
33. செய்யூர்-வலவாபூரி
34. கின்ஜி
35. மயிலம்
36. இஞ்சிக்குடி
37. திருவாக்கரை
38. வடுகூர்ட்
39. திருத்துறையூர்
40. திருவதிகை
41. திருபாதிரிப்புலியூர்
42. திருமாணிக்குழு
62. கண்ணபுரம்
63. பெரியமடம்
64. கந்தன்குடி
65. திருச்செங்காட்டாங்குடி

43. திருவாழூர்-திருவாழூர்

44. திருவாமூர்-திருவாமூர்

45. திருவாமாத்தூர்

46. திருக்கோவிலூர்

47. திருவெண்ணெய்நல்லூர்

48. வேப்பூர்

49. விருத்தாச்சலம்

50. எருக்கத்தம்புலியூர்

51. ஸ்ரீமுஷ்ணம்

52. கூடலையாற்றூர்

53. சிதம்பரம்

54. மயேந்திரப்பள்ளி

55. சீர்காழி

56. காவிரிப்பூம்பட்டினம்

57. வைதீஸ்வரன் கோவில்

58. எண்கண்

59. ஆக்கூர் (தான்தோன்றி)

60. திருக்கடவூர்

61. திருநற்றாறு

66. திருவாவூர்

67. விஜயபுரம்

68. நாகப்பட்டணம்

69. எட்டிக்குடி

70. வலிவலம்

71. மாகாளம்

72. சாதிமுட்டம்

73. வேதாரண்யம்

74. கோடிக்குழகர்கோயில்

75. திருப்பெருந்துறை

76. ஆவுமையார் கோயில்

77. அம்பர்

78. கடம்பூர்

79. திலதைப்பாடி

80. வழுவூர்

81. திருவிற்குடி

82. குடவாயில்

83. திருப்பனந்தான்

84. பந்தனைநல்லூர்

85. முருதுவாக்குடி

86. திருவிடைமருதூர்

87. கும்பகோணம்

88. பாபநாசம்

89. தஞ்சாவூர்

90. திருபூந்துருத்தி

91. திருவையாறு

107. குரட்டி

108. கண்டனூர்

109. வேணிமாக்கடல்

110. விராலிமலை

111. நத்னகிரி

112. குளித்தலை

113. புகழிமலை

92. திருநெய்த்தானம்
93. திருநெல்வயல் (அருட்டுறை)
94. வேப்பஞ்சந்தி
95. காவலூர்
96. திருட்டவாட்டுரை
97. திருவானைக்காவல்
98. நெடுங்குளம்
99. திருச்சிராப்பள்ளி
100. திருப்பராய்த்துறை
101. வயலூர்
102. கருவூர்
103. திருகற்குடி
104. நெருவூர்
105. ஆதிப்பட்டு
106. ஆதிக்கரை
114. ராசிபுரம்
115. திருச்செங்கோடு
116. பவானி
117. கொங்கணகிரி
118. சேலம்
119. தீர்த்தகிரி
120. கனகமலை
121. ஜனன மலை
122. குருடிமலை
123. பேரூர்
124. திருப்புக்கொளியூர்
125. அவினாசி
126. திருமுருகன்பூண்டி
127. விஜயமங்கலம்
128. சென்னிமலை
129. பாண்டிக்கொடுமுடி
130. பாட்டாளியூர்-சிவமலை
131. காங்கேயம்
132. ஓதமலை
133. தென்சேரிகிரி
134. கீரனூர்
135. ஆயக்குடி
136. திருவாவினன்குடி (பழநி)
137. பெரியகுளம்
138. தனிச்சியம்
153. கொடுங்குன்றம்
154. விநாயகமலை
155. திருப்பத்தூர்
156. குன்றக்குடி
157. திருவாடானை
158. ராஜகம்பீரவளநாட்டுமலை
159. கொடும்பாளூர்
160. உத்தரகோசமங்கை
161. ராமேஸ்வரம்
162. தனுஷ்கோடி

139. பழமுதிர்ச்சோலை
140. திருவேடகம்
141. மதுரை
142. திருப்பரங்குன்றம்
143. இலஞ்சி
144. குற்றாலம்
145. திருமலை
146. பாபநாசம்
147. நாங்குநேரி
148. வள்ளயூர்
149. திருச்செந்தூர்
150. திருநெல்வேலி
151. கழுகுமலை
152. சிவகாசி
163. திரிகோணமலை
164. கதிர்காமம்
165. எழுகரைநாடு
166. திருப்பதி
167. காளகஸ்தி
168. திருமலை